அருவியூர்

# நகரத்தார் குரல்

திங்கள் இரண்டுக்கு ஒன்று

ஆண்டு 29 - 171
குரோதி - சித்திரை

கல்வி பண்பாடு வளர்ச்சி இதழ்

மே 2024

## சஷ்டியப்த பூர்த்தி பீமரத சாந்தி விழா



## அல. அலங்காரம் செட்டியார் - அல. சந்திரா ஆச்சி

குடிப்பட்டம்: பூதமங்கலமூருடையார் சிங்கம்புணரி பூர்வீகம்: உலகம்பட்டி

மகன் – மருமகள்

**திரு. அல. அருண் – தேன்மொழி**

மகள் – மருமகன்

**அ. ஜெயந்தி அமர்நாத் – முரு. அமர்நாத்**

வெளியீடு

அருவியூர் வடக்குவளவு நகரத்தார்

கல்வி வளர்ச்சிக் கழகம் (பதிவு)

பிரான்மலை

உ

நமது சமூகத்தின் கல்வி வளர்ச்சியே எமது தலையாய குறிக்கோள்

உதவுவோம்! பண்படுத்துவோம்! பாராட்டுவோம்!

**பட்டம் பெற்றுத் தொழிலிற் சிறப்போம்!**

# அருவியூர் நகரத்தார் குரல்



**ஆண்டு 29**
**குரல் 171**

ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப்பு உடைத்து - குறள் 398

**மே 2024**
**குரோதி**
**சித்திரை**





கடிதம், செய்திகள், படைப்புகள் இவற்றை
அனுப்ப வேண்டிய முகவரி :
அருவியூர் நகரத்தார் குரல்,
அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம்,
3, முதல் குறுக்குத் தெரு,
அழகப்பா காம்ப்ளெக்ஸ் பின்புறம்,
பொன்னமராவதி, புதுக்கோட்டை - 622 407.
**avnkalvi@gmail.com**
அலுவலக வாட்ஸ்அப் : 87783 55837


## தமிழ் குரோதி புத்தாண்டு வாழ்த்துகள்



**விரோதங்களும், குரோதங்களும் என்றும் அகன்றிட!**
**அன்பும், இன்பமும் பொங்கி வழிந்திட!**
**நல்லனவே நடந்து நானிலம் சிறந்திட!**
**நம் சமுதாய ஒற்றுமை தழைத்தோங்கிட!**
**இனிய தமிழ் புத்தாண்டு நல் வாழ்த்துகள்!!**

**- நிர்வாகிகள், அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம்**

# உள்ளடக்கம்

தலைவர் சிந்தனை

**வணிகம் செய்வோம்!**
**வளம் பெறுவோம்!**

**செ. ஆசை அலங்காரம்** B.Sc.,
தலைவர்

**மக்கள் சேவையே! மகேசன் சேவை!**



அன்பார்ந்த நகரத்தார் பெருமக்களே! வணக்கம்.

விரோதங்களும், குரோதங்களும் அகன்று அன்பும், இன்பமும் பொங்கி வழியும் இனிய ஆண்டாக தமிழ் குரோதி ஆண்டு அமைய எனது வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த தமிழ் வருடம் வாரத்தின் முதல் நாள் ஞாயிற்றுக்கிழமை வளர்பிறை சஷ்டியில் பிறந்திருப்பது ஒரு நல்ல அறிகுறியாகவே எனக்குத் தென்படுகிறது. செட்டிக் குமரன் என்றழைக்கப்படும் முருகன் தமிழ்க்கடவுள் ஔவைப் பாட்டியின் தமிழோடு விளையாடிய தமிழ்க்கடவுள் அவன் செட்டிமார்களுக்கு உரித்தான கடவுள். முருகு என்றால் அழகு என்றும் முருகன் என்றால் அழகன் என்றும் பொருள் உண்டு. அழகன் முருகனுக்கு உகந்த நன்னாளில் இந்த தமிழ் வருடப்பிறப்பு அமைந்திருப்பது மிகுந்த மனநிறைவும், மகிழ்ச்சியும் அளிப்பதாகும்.

கடந்த மார்ச் மாதம் 2024 நகரத்தார் குரல் இதழில் எனது நிறைவுக் கட்டுரையில் அனைவருக்கும் நன்றி பாராட்டி வரைந்திருந்தேன் 2012-2013 ஆம் ஆண்டு முதல் தொடர்ந்து ஆண்டுதோறும் மாணவர்களின் கல்வி நலன் கருதி ரூ.1,50,000/- வழங்கி வரும் மாபெருங் கொடை வள்ளல் திரு A.P. ஸேதுராமன் செட்டியார் - திருமதி ஸே. விஜயலட்சுமி ஆச்சி குடும்பத்தினருக்கும், மாபெருங் கொடை வள்ளல் துபாய் திரு சொ. இராமனாதன் செட்டியார் அவர்களுக்கும், சிறப்பு மாபெருங் கொடை வள்ளல் திரு R.M. செந்தில் செட்டியார் அவர்களுக்கும் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஆண்டுதோறும் தொடர்ந்து 10 ஆம் வகுப்பில் முதலிடம் பெறும் மாணவர்களுக்கு தங்கப்பதக்கம் பணமுடிப்பு ரூ.10,000/- வழங்கி வரும் கோயமுத்தூர் அ.வ.ந. சங்கத்

தலைவர் திரு A.P. ஸேதுராமன் செட்டியார் அவர்களுக்கும் மற்றும் அனைத்து நிர்வாகிகளுக்கும் மனமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன். மேலும் நமது நகரத்தார் குரலில் பிரசுர செலவுகளை ஈடுகட்டும் வகையில் தொடர்ந்து பல ஆண்டுகாலமாக விளம்பரங்களை வழங்கி உதவி வரும் விளம்பரதாரர்களுக்கு நன்றி கூற தவறிவிட்டேன். அதனை பொறுத்தருள விளம்பரதாரர்களைக் கேட்டுக் கொள்கிறேன். தொடர்ந்து விளம்பரங்களைக் கொடுத்து உதவிடும் நல்ல உள்ளம் படைத்த விளம்பரதாரர்கள் அனைவருக்கும் என்னுடைய கோடானுகோடி நன்றிகளை தெரிவித்துக் கொள்வதோடு தொடர்ந்து ஆதரவளிக்க வேண்டுமாய் கேட்டுக் கொள்கிறேன். அதனால்தான் என்னவோ மீண்டும் ஒருமுறை கடிதம் எழுதும் வாய்ப்பு எனக்கு கிடைத்ததாகக் கருதுகிறேன்.

கல்வி வளர்ச்சிக் கழகத்தின் புதிய நிர்வாகிகளின் பதவிப்பிரமாணம் தாமதமானதால் தான் மீண்டும் ஒருமுறை தலையங்கம் எழுதும் வாய்ப்பு அருள்மிகு மங்கை-நாயகர் சுவாமிகள் எனக்கு வழங்கிய வாய்ப்பாகக் கருதுகிறேன்.

நமது நகரத்தார் சமுதாயத்திற்கு நாகநாடு தொடங்கி இன்றுவரை நீண்ட நெடிய வரலாறு உண்டு. பழம் பெருமைகள் பல நமக்கு உண்டு. பாராட்டத் தகுந்த வாழ்க்கையில் அனைவரும் கடைப்பிடிக்க வேண்டிய நல்ல பல பழக்க வழக்கங்களும் நம்மிடம் உண்டு. அதில் முக்கியமானது இறை நம்பிக்கையும் அவனைத் தொழுது வணங்கி வருவதுமாகவும், அனைத்து உயிர்களிடத்தும் கருணை காட்டுதல், அன்பு பாராட்டுதல், தர்மங்கள் செய்தல், அனுசரித்து போதல், விட்டுக் கொடுத்தல், (பிடிவாதமின்மை) போன்ற நல்ல பண்புகளும், உண்மை, நேர்மை, வாய்மை, சத்தியம், நாணயம், சேமிப்பு, எளிமை, சிக்கனம், போன்ற எண்ணற்ற பழக்க வழக்கங்களும் தான் பல தடைகளையும், இடையூறுகளையும் தாண்டி நம்மை முன்னேற்ற பாதையில் அழைத்துச் செல்கிறது. மொகலாயர்களின் படையெடுப்பால் நம் மூதாதையர்களின் செல்வங்கள் அனைத்தையும் இழந்து, உயிருக்குப் பயந்து மலை மறைவு பகுதிகளில் தஞ்சமடைந்த நிலையிலும், பீனிக்ஸ் பறவை

போல நாம் மீண்டும் உயர்வடைய மேற்கொண்ட பண்புகளும், பழக்க வழக்கங்களும் தான் காரணமாக அமைந்தது என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

2024-2027 ஆம் ஆண்டிற்கான பொதுநலச் சங்க நிர்வாகிகள் தேர்வில் கடும் போட்டி நிலவியது. 5 அணிகள் போட்டியிட்டன. பொதுநலச் சங்க அமைப்பே இரண்டாக பிளவுபட்டு விடுமோ என்று நாம் அச்சப்படும்படியான நிலை ஏற்பட்டது. தெய்வாதீனமாக மூன்று அணிகள் போட்டியிலிருந்து ஒதுங்கிக் கொண்டு போட்டியின் வீரியத்தை சற்றே குறைத்தனர். இதற்கிடையில் குழுக்கள் அமைத்து பேச்சுவார்த்தைகள் பல கட்டங்களாக நடத்தப்பட்டது. நாம் நமது சமுதாய நிர்வாகிகள் தேர்வில் இதுகாறும் கடைப்பிடித்து வந்த மேல்முகத்தைச் சேர்ந்தவர்கள் ஒரு முறையும்; கீழ் முகத்தைச் சேர்ந்தவர்கள் ஒருமுறையும் என்கிற நடைமுறை பின்பற்றப்படாதது தான் முக்கிய காரணம் என்பதை நாம் அனைவரும் அறிந்து கொள்ள முடிந்தது. இருந்தபோதும் ஒரு சுமூகமான தீர்வு ஏற்படவேண்டும்; சமுதாயத்தின் ஒற்றுமை காக்கப்பட வேண்டும் என்கிற எண்ணமும் எதிர்பார்ப்பும் போட்டியாளர்கள் உட்பட அனைவரிடத்திலும் மிகுதியாகவே இருந்ததையும் காண முடிந்தது. கோவை திரு A.P. ஸேதுராமன் அவர்கள் தலைமையில் திரு G. சுப்பிரமணியன் திரு M. சாமிநாதன் ஆகியோர்கள் ஒரு அணியாகவும், கிருங்காக்கோட்டை திரு M. மாணிக்கம் அவர்கள் தலைமையில் திரு V. நேருதாசன் திரு M. இளங்கோவன் ஆகியோர்கள் ஒரு அணியாகவும் நேரடிப் போட்டியில் இருந்தனர்.

திரு A.P. ஸேதுராமன் அவர்கள் தலைமையிலான அணியினர் தங்களுக்கு தலைவர் பதவி மட்டும் தாருங்கள் மற்ற பொறுப்புகளை அவர்கள் எடுத்துக்கொள்ள சம்மதிக்கிறோம் என தெரிவித்தார்கள். அதே போன்று திரு M. மாணிக்கம் அவர்கள் தலைமையிலான அணியினர் நல்லதொரு தீர்வை வெளிப்படுத்தினார்கள். அதாவது அணிகளை பிரிக்க வேண்டாம். அப்படியே தங்களுடைய அணி பிரியாமல் அப்படியே இருந்து செயல்படுவதாக இருந்தால் அவர்களுக்கு நாங்கள் விட்டுக் கொடுத்து போட்டியிலிருந்து விலகிக் கொள்கிறோம் அல்லது திரு A.P.

ஸேதுராமன் அவர்கள் தலைமையிலான அணியினர் எங்கள் மூவருக்கும் விட்டுக்கொடுத்து ஒரு சமசரம் ஏற்பட வழி செய்யட்டும் என தெரிவித்தார். இதிலும் பல குழப்பங்கள் ஏற்பட்டு கடைசியாக திரு A.P. ஸேதுராமன் அணியினர் நாங்கள் மூவரும் எந்த மாற்றமும் இன்றி பதவிக்காலம் முடியும்வரை தொடர்ந்து செயல்படுவோம் என்ற உறுதியை முன்வைக்க திரு M. மாணிக்கம் தலைமையிலான அணியினர் மற்றும் மேல் முகத்தைச் சேர்ந்த பெரியவர்கள், சங்க நிர்வாகிகள் அனைவரும் இந்த சமரச உடன்பாட்டிற்குச் சம்மதம் தெரிவிக்க திரு A.P. ஸேதுராமன் அவர்கள் தலைமையிலான அணியினர் போட்டியின்றி தேர்வு செய்யப்பட்டதாக அறிவிக்கப்பட்டது. இவ்வளவு கடும் போட்டிக்கிடையில் அமைதியான முறையில் சமரசமாக தேர்தல் முடிந்தது அனைவருக்கும் மகிழ்ச்சியைத் தந்தது. நமது சமூகம் ஒற்றுமையைப் பேணிக்காக்க வேண்டும் என்பதில் திரு M. மாணிக்கம் தலைமையிலான அணியினர் காட்டிய அக்கறை பாராட்டத்தக்கது. மிகவும் போற்றப்பட வேண்டியதாகும். அதற்காக திரு M. மாணிக்கம், திரு V. நேருதாசன் திரு M. இளங்கோவன் ஆகியோருக்கும் இச் சமரச பேச்சுவார்த்தைக்கு ஒத்துழைப்பு வழங்கிய போட்டியாளர்கள், பெரியவர்கள் அனைவருக்கும் எனது சார்பிலும், நமது நகரத்தார்கள் சார்பிலும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**வேற்றுமையை வேரறுப்போம்!**
**ஒற்றுமையைப் பேணிக் காப்போம்!**
**சமுதாயம் வளர இணைந்து செயல்படுவோம்!!**

## காப்புகட்டு விழா – பெயர் சூட்டும் விழா

20-03-2024 புதன்கிழமை அன்று பொன்னமராவதி திரு N. திருஞானம் செட்டியார் – தெய்வத்திருமதி தி. செல்வி ஆச்சி இவர்களது பேத்தி, திரு T. மணிரத்னம் செட்டியார் – ம. ஆர்த்தி ஆச்சி இவர்களது மகளுக்கு **M.A. யாழிசை** என்று பெயர் சூட்டப்பட்டது. இவ்விழாவில் உற்றார் உறவினர்கள் கலந்து கொண்டு குழந்தையை வாழ்த்த, விழா சிறப்பாக நடைபெற்றது.

**தகவல் : திரு N. திருஞானம் செட்டியார்,**
**13 வது வார்டு கவுன்சிலர், பொன்னமராவதி.**

**அருவியூர் வடக்குவளவு நகரத்தார் பொதுநலச் சங்கம்**
**பிரான்மலை-630 502**

# 49 வது ஆண்டு தொடக்க விழா பொதுக்குழுக் கூட்ட அழைப்பிதழ்

பேரன்புடையீர்!

நிகழும் மங்களகரமான குரோதி வருடம் சித்திரைத் திங்கள் 29ம் நாள் **12.05.2024 ஞாயிற்றுக்கிழமை பிரான்மலை மங்கைநாயகர் மன்றத்தில்** நடைபெற இருக்கும் பொதுக்குழுக் கூட்டத்திற்கு அருவியூர் வடக்குவளவு நகரத்தார் பெருமக்கள் அனைவரும் வருகை தந்து சிறப்பிக்குமாறு அன்புடன் கேட்டுக் கொள்கின்றோம்.

## புதிய நிர்வாகிகள் பதவி ஏற்பு விழா

**அ.வ.ந. பொதுநலச்சங்கம் 2024-2027**

| | | |
|---|---|---|
| தலைவர் | : | **திரு A.P. ஸேதுராமன்** |
| செயலாளர் | : | **திரு G. சுப்பிரமணியன்** |
| பொருளாளர் | : | **திரு மா. சுவாமிநாதன்** |

இவர்களுக்குத் தேர்தல் அலுவலர்கள்
திரு பொன். சிவஞானம் & திரு M. இராமசாமி ஆகியோர்கள்
பதவிப் பிரமாணம் செய்து வைப்பார்கள்.

**அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம் 2024-2027**

| | | |
|---|---|---|
| தலைவர் | : | **திரு சொ. இராமனாதன்** B.Com., FCA. |
| செயலாளர் | : | **திரு மு. இராமலிங்கம்** M.A., B.Lit., B.Ed. |
| பொருளாளர் | : | **திருமதி சந்திரகலா இராமநாதன்** |

இவர்களுக்குத் தேர்தல் அலுவலர்கள்
திரு M.S. முருகப்பன் & திரு S. வேலாயுதம் ஆகியோர்கள்
பதவிப் பிரமாணம் செய்து வைப்பார்கள்.

அன்புடன் சமுதாயப் பணியில்
**திரு மு. சாமிநாதன், செயலாளர்**

## தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள பிரான்மலை அ.வ.ந. பொதுநலச் சங்க 2024-2027 ஆம் ஆண்டுகளுக்கான புதிய நிர்வாகிகள்



தலைவர்

திரு **A.P. ஸேதுராமன்**



செயலாளர்

திரு **G. சுப்பிரமணியன்**



பொருளாளர்

திரு **மா. சுவாமிநாதன்**

இவர்கள் 12.05.2024 ஞாயிற்றுக்கிழமை அன்று பிரான்மலை மங்கைநாயகர் மன்றத்தில் நடைபெறும் அ.வ.ந. பொதுநலச் சங்க 49வது பொதுக்குழு கூட்டத்தில் பதவி ஏற்றுக் கொள்வார்கள் என்பதையும் இவர்களின் பணி சிறக்க கல்வி வளர்ச்சிக் கழகத்தின் அனைத்து நிர்வாகிகள் சார்பாக மனமார்ந்த வாழ்த்துக்களையும், பாராட்டுக்களையும் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

## தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள பிரான்மலை அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழக 2024-2027 ஆம் ஆண்டுகளுக்கான புதிய நிர்வாகிகள்



தலைவர்

திரு **சொ. இராமனாதன்**



செயலாளர்

திரு **மு. இராமலிங்கம்**



பொருளாளர்

திருமதி **சந்திரகலா இராமனாதன்**

இவர்கள் 12.05.2024 ஞாயிற்றுக்கிழமை அன்று பிரான்மலை மங்கைநாயகர் மன்றத்தில் நடைபெறும் விழாவில் பதவி ஏற்றுக்கொள்வார்கள் என்பதையும் இவர்களின் பணி சிறக்க கல்வி வளர்ச்சிக் கழகத்தின் அனைத்து நிர்வாகிகள் சார்பாக மனமார்ந்த வாழ்த்துக்களையும், பாராட்டுக்களையும் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். **–நிர்வாகிகள். அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம், பிரான்மலை**

# கல்விக்கடன் செலுத்தாதவர்களுக்கான இறுதி அறிவிப்பு



அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகத்திடமிருந்து வட்டியில்லா கல்விக்கடன் பெற்று ஆண்டுக்கணக்கில் ஒரு சிறு தொகை கூட திரும்பச் செலுத்தாமல் சிலர் உள்ளனர். அவர்கள் அனைவரும் நல்ல நிலையில் உள்ளனர். நல்ல வேலையில், நல்ல சம்பளத்தில் உள்ளவர்கள் கடனை திருப்பி கட்டுவதற்குரிய அனைத்து வாய்ப்புகளும் வசதிகளும் அருள்மிகு மங்கை நாயகர் அருளால் அவர்களுக்கு உள்ளது. பலமுறை கடிதம் மூலமாகவும், போன் மூலமாகவும் அவர்களுக்கு பல நினைவூட்டுகள் செய்யப்பட்டன. அவர்கள் இவைகள் எதற்கும் மதிப்பளிக்கவில்லை. தற்போது போன் செய்தால் சிலர் போனை எடுப்பதில்லை. முகவரி மாற்றத்தையும் இவ்வலுவகத்திற்கு பலமுறை கேட்டும் தெரிவிக்கவில்லை.

மேற்கூறியபடி கல்விக்கடனைத் திரும்ப செலுத்தாவர்கள் அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழக செயற்குழுவில் முடிவு செய்யப்பட்டபடி, இது முதல் ஒவ்வொரு குரலிலும் அவர்களது பெயர்கள், அவர்கள் கடனைக் கட்டும் வரை, பெற்றோர் மற்றும் மாணவர் புகைப்படத்துடனும், முகவரியுடனும் தொடர்ந்து வெளியிடப்படும் என்று ஜனவரி 2024 குரலிலும், தொடர்ந்து மார்ச் 2024 குரலிலும் வெளியிடப்பட்டன. இருப்பினும் மூன்று நபர்கள் தவிர மற்றவர்கள் கடனை திரும்பச் செலுத்த முன் வரவில்லை. மீண்டும் ஒருமுறை அவர்களுக்கு வாய்ப்பளிக்கும் வகையில், இந்த அறிவிப்பு கிடைக்கப்பெற்ற ஒரு மாதத்திற்குள் தாங்கள் பெற்ற கல்விக் கடனை தவணை முறையிலாவது திரும்ப செலுத்துமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம். தவறும் பட்சத்தில் மேற்கண்டவாறு அவர்களது பெயர் விவரங்கள் குரலில் வெளியிடப்படும்.

**– நிர்வாகிகள், அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம்**

# செயலாளர் அறிக்கை

மு. இராமலிங்கம், செயலாளர்



2022-2024 ஆம் ஆண்டிற்கான கல்வி வளர்ச்சிக் கழகத்தின் செயலாளராக அருவியூர் வடக்குவளவு நகரத்தார் பெருமக்களின் ஆதரவோடு ஏகமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டு 12.03.2022 முதல் நாளது தேதி வரை மங்கை நாயகர்-தேனம்மை சுவாமி அருளால் சமூக மாணவர்கள் நலன் கருதி சிறப்பாக பணியாற்றி வருகிறேன். மேலும் பொறுப்பேற்ற நாள் முதல் 2022-2023 ஆம் ஆண்டில் 156 மாணவர்களுக்கு இலவச கல்வித் தொகையாக ரூ. 4,86,000/- வழங்கப்பட்டுள்ளது. (6 முதல் 12 ஆம் வகுப்பு மற்றும் இளங்கலை, முதுகலை, மருத்துவம், பொறியியல், வேளாண்மை, பட்டயக் கணக்கர் படிப்பவர்களுக்கு) மேலும் 2023-2024 ஆம் ஆண்டில் 174 மாணவர்களுக்கு இலவச கல்வித் தொகையாக ரூ. 5,70,000/- வழங்கப்பட்டுள்ளது. மேலும் 2022-2023 ஆம் ஆண்டில் கல்வி கடனாக 6 மாணவர்களுக்கு தொகை ரூ. 60,000/-வழங்கப்பட்டுள்ளது. 2023-2024 ஆம் ஆண்டில் கல்விக் கடனாக 9 மாணவர்களுக்கு தொகையாக ரூ. 90,000/- வழங்கப்பட்டுள்ளது. மேலும் கல்விக்காவலர் கிருங்காக்கோட்டை திரு V. லட்சுமணன் செட்டியார் - பாக்கியலட்சுமி ஆச்சி அவர்களின் நல்லெண்ண தன்னார்வத்தின் மூலம் 2022-2023 இல் கும்பகோணத்தைச் சேர்ந்த கல்லூரியில் பயிலும் ஒரு மாணவிக்கு ரூ. 5000/-மும் 2023-2024 இல் மேற்கண்ட கல்விக்காவலர் குடும்பத்தினர் சொக்கம்பட்டியைச் சேர்ந்த கல்லூரியில் பயிலும் ஒரு மாணவிக்கு ரூ.10,000/- மும் எனது முயற்சியால் பெற்று வழங்கப்பட்டுள்ளது.

மேலும் கொட்டாம்பட்டி அ.வ.ந. கல்வி வளர்ச்சி வணிக வளாக கட்டிடத்தில் மேல் மாடியில் சுமார் ரூ.8,00,000/- மதிப்பிலான தங்கும் அறைகள் எங்கள் நிர்வாகத்தின் மூலம் கட்டப்பட்டு நன்முறையில் செயல்பட்டு வருகிறது. மேலும் பிரான்மலை அ.வ.ந. பொதுநலச் சங்கத்தின் நிர்வாகத்திற்கு உட்பட்ட சிங்கம்புணரி ஸ்ரீ மீனாட்சி-தெய்வானை ஆச்சி பெயரில் கட்டப்பட்டுள்ள புதிய வணிக வளாக கட்டிடத்தின் மேல் பகுதியில் சுமார் ரூ.10,00,000/- மதிப்பில் எங்கள் நிர்வாகத்தின் மூலம் கட்டப்பட்டு வருகிறது. ஆகவே இதற்கு முழு

ஒத்துழைப்பு நல்கிய அ.வ.ந. பொதுநலச்சங்கத் தலைவர், செயலாளர், பொருளாளர் அனைத்து நிர்வாகிகளுக்கும் மனமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம். 2023-2024 ஆம் கல்வி ஆண்டில் அரசுப் பள்ளிகளில் பயிலும் மாணவ-மாணவிகளுக்கு (தாய் தந்தை இழந்தோர், வறுமைக்கோட்டிற்கு கீழுள்ளோர்) ரூ.1000 வீதம் 25 நபர்களுக்கு-தலா ஒரு பள்ளிக்கு ரூ.25000 ஒதுக்கீடு என 4 பள்ளிகளுக்கு 100 மாணவர்களுக்கு ரூ.1,00,000/- எங்கள் நிர்வாகத்தின் மூலம் வழங்கப்பட்டுள்ளது. இது தவிர வங்கிகளில் வைப்புத் தொகையாக ரூ.1,10,00,000/- (ரூபாய் ஒரு கோடியே பத்து இலட்சம் மட்டும்) பாதுகாக்கப்பட்டு வருகிறது. மேற்கண்ட செயல்கள் அனைத்தும் பிரான்மலை அ.வ.ந. பொதுநலச்சங்கம், 52 கல்விக் காவலர்கள் மற்றும் இலவச கல்வித் தொகை வழங்கும் திரு தே.மா. பழனிச்சாமி செட்டியார், திரு சொ. வைத்திலிங்கம், திரு A.P. ஸேதுராமன், திரு A.P. மணிகண்டன் தங்கப்பதக்கம் பணமுடிப்பு வழங்கும் அ.வ.ந. சங்கம், கோவை, அ.வ.ந. சங்கம், பொன்னமராவதி, தூத்துக்குடி திரு அரு.சோம. சண்முகநாதன், 3-மாபெருங் கொடை வள்ளல் நிதி, பெருங்கொடை வள்ளல் நிதி, கொடை வள்ளல் நிதி, வள்ளல் நிதி, பெரும்புரவலர் நிதி, புரவலர் நிதி, வெள்ளிப்பதக்கம் நிதி, குரல் விளம்பரதாரர் நிதி வழங்கிய அத்துணை நல்ல உள்ளங்களுக்கும், கல்விக்கடன் செலுத்திய மாணவர்களுக்கும் குரல் வாசகர்கள், குரல் செய்தித் தொடர்பாளர்கள் மற்றும் அனைத்து ஊர் நகரத்தார் தலைவர்களுக்கும், சரியான நேரத்தில் மனமகிழ்ச்சியோடு ஒவ்வொரு மாதமும் குரல் அச்சிட்டுக் கொடுத்த சிவகாசி சூர்யா பிரிண்ட் சொலுசன்ஸ் உரிமையாளர் திரு சொ. முருகேசன் அவர்களுக்கும், அவருடன் இணைந்து பணியாற்றி வரும் குழுவினருக்கும் 2021-2024 நிர்வாகிகளாக செயல்பட்ட தலைவர் திரு செ. ஆசை அலங்காரம், செயலாளர் திரு மு. இராமலிங்கம், பொருளாளர் திரு சு. முத்து ஆகியோர்கள் சார்பாக மனமார்ந்த வாழ்த்துக்களையும், பாராட்டுதல்களையும், நன்றிகளையும் பணிந்து தெரிவித்துக் கொள்கிறோம். எங்களுக்கு நல்ல ஆதரவளித்தும், ஆலோசனை வழங்கியும் வழிகாட்டுதலும் செய்து எங்களின் சிறப்பான பணிக்கு வித்திட்ட அனைத்து அ.வ.ந. நகரத்தார் பெருமக்களுக்கும் மனமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம். இத்துடன் தங்களின் நல்லாசியுடன் விடைபெற்றுக் கொள்கிறோம். நன்றி வாழ்க வளமுடன். **– அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம், பிரான்மலை**

படித்ததில் பிடித்தது–11



# சுலோச்சனா முதலியார் பாலம்

சொ. வைத்திலிங்கம்



திருநெல்வேலி–பாளையங்கோட்டை ஆகிய இரட்டை நகர்களுக்கு இடையே ஓடும் நதி தான் தாமிரபரணி. அந்த நதியில் மக்கள் நலனுக்காக ஒரு தனி மனிதராக **சுலோச்சன முதலியார்** என்ற செல்வந்தர் வழங்கிய 50 லட்சம் ரூபாய் செலவில் 1840–ம் ஆண்டு ஒரு பாலம் கட்டப்பட்டது. தனியொரு மனிதருடைய நன்கொடையால் பாலம் கட்டப்பட்டது. திருநெல்வேலி மாவட்டம் முழுவதுமே அப்போது ஒரு அதிசயச் செய்தியாகப் பேசப்பட்டது. இன்றளவும் அந்தப் பாலம் **சுலோச்சன முதலியார் பாலம்** என்றே அழைக்கப்படுகிறது. செய்தியைப் படித்துப் பாருங்கள்.

திருநெல்வேலி–பாளையங்கோட்டை இரட்டை நகரங்கள் இரண்டிற்கும் இடையில் 800 அடி அகலம் உள்ள தாமிரபரணி ஆறு, ஏப்ரல் – மே மாதங்கள் தவிர, ஆண்டு முழுவதும் வெள்ளம் கரைபுரண்டோடும். ஆற்றைக் கடந்திடப் படகில் தான் பயணித்திடல் வேண்டும். படகிற்காகப் பலமணி நேரம் காத்திருத்தல் வேண்டும். குழுவாகச் செல்வோர் எல்லோரும் ஒன்றாக ஒரே நேரத்தில் சென்றுவிட முடியாது. படகில் இடம் பிடித்திட, முதலில் பயணிக்க லஞ்சம் கொடுப்பதும் வாங்குவதும் வாடிக்கையாகி விட்ட சமாச்சாரங்கள். சமூக

விரோதிகளின் திருவிளையாடல்களுக்குப் பஞ்சமிருக்காது. களவும், கலகமும், குழப்பமும் பழகிவிட்ட நடைமுறை. 1840 ஆம் ஆண்டு, மார்ச் மாதம் 10 ஆம் நாள் இரவு தாம்சன் ஜில்லா கலெக்டராகப் பொறுப்பேற்று 5 நாட்கள் ஆன நிலை. தாமிரபரணிப் படகுத் துறையில் குழப்பம் கலகம், நாலைந்து கொலைகள் எனவே கலெக்டர் தூங்காமல் தவித்துக் கொண்டிருந்தார். நெல்லை-பாளை நகரங்களுக்கிடையே பாலம் ஒன்றிருந்தால் என்று சிந்தித்துக் கொண்டே உறங்கியும் போனார். ஆலோசனைக் கூட்டமும் அரை லட்ச மதிப்பீட்டில் பாலங் கட்டத் தீர்மானமும் கேப்டன் பேபர் W.H. ஹார்ஸ்லி (தாசில்தார்) நமது சுலோச்சன முதலியார் (சிராஸ்தார்) ஆகியோர் கலெக்டர் தாம்சன் தலைமையில் கூடினர்.

உடனடியாகப் பாலங்கட்டத் தீர்மானிக்கப்பட்டது. கேப்டன் பேபரிடம் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டது. வரைபடம் தயாரானது. 760 அடி நீளம், 21.5 அடி அகலம், 60 அடி விட்டம் கொண்ட 11 ஆர்ச்சுகள், அவற்றைத் தாங்கிட இரட்டைத் தூண்கள் என அமர்க்களமான வரைபடம் தயாரானது...

தூண்கள் ரோமானிய அரண்மனையை நினைவூட்டி, லண்டன் தேம்ஸ் நதியில் அமைந்துள்ள வாட்டர்லு பாலத்தைப் போன்ற தோற்றப் பொலிவுடன் திகழ்ந்தது... திட்டமதிப்பீடு ஐம்பது லட்சம். கலெக்டர் உட்பட அனைவரும் மலைத்துப் போயினர். இன்றைய மதிப்பில் அது பல கோடியைத் தாண்டி விடும். ஆனால் மகிழ்ச்சியுடன் கலெக்டர் ஒப்புதல் அளிக்கின்றார்... பணத்திற்கு என்ன செய்வது? எங்கே போவது, மக்களிடம் வசூல் செய்வது என்று தீர்மானிக்கின்றார். அதே சமயம் கலெக்டர் அவரிடம் சிரஸ்தாரராக வேலை பார்க்கும் சுலோச்சன முதலியார் பக்கம் கலெக்டரின் பார்வை செல்கின்றது... அது சரி, யார் இந்த சுலோச்சன முதலியார்...?

தொண்டை மண்டலத்தில் உள்ள ஓர் சிற்றூரில் இருந்து நெல்லைக்குக் குடியேறியவர்கள் தான் முதலியாரின் மூதாதையர்கள்.. கோடீஸ்வரக் குடும்பம்... வீட்டில் தங்கக்



கட்டிகள் பாளம் பாளமாய் அடுக்கி வைக்கப்பட்டிருக்குமாம்.. தங்கம், வெள்ளி நாணயங்கள் சாக்கு மூட்டைகளில் கட்டிப் போட்டிருப்பார்களாம்... கௌரவத்திற்காகவே கலெக்டர் ஆபீஸ் உத்தியோகம்... குதிரை பூட்டிய வண்டியில் கலெக்டருக்குச் சமமாக அலுவலகத்திற்கு வருபவர்... நீளமான அல்பேகா, கருப்புக் கோட்டு, ஜரிகைத் தலைப்பா, அங்கவஸ்திரம், வைரக் கடுக்கன் ஆகியவற்றோடு அலுவலகத்திற்கு வருவதே கம்பீரமாக இருக்குமாம்... மக்களிடம் வசூல் வேட்டை அவருக்குத் தர்ம சங்கடமான நிலை... நடந்தனவற்றை வீட்டில் மனைவியிடம் சொல்கின்றார்.

மனைவி வடிவாம்பாள் கவலைப்படாதீர்கள். தூங்குங்கள். காலையில் பார்த்துக் கொள்ளலாம் என ஆறுதல் அளிக்கின்றார்... தூங்கிய சுலோச்சன முதலியாரின் நினைவலைகளின் சுழற்சி. மனைவி வடிவாம்பாள், குடும்ப வசதி, ஒரே மகன் வேதாத்திரிதாச முதலியார் திருவாங்கூர் உயர்நீதிமன்ற நீதிபதியாகப் பணியாற்றுவது.. என்றெல்லாம் நெஞ்சத் திரையில் நிழலாட பல்வேறு நினைவுகளுடன் இரவுப் பொழுதைக் கழிக்கின்றார். ஒரு முடிவெடுத்தும் விடுகின்றார்... அவர் தான் ஒருவரே பாலம் கட்டுவதற்குக் கலெக்டரிடம் 50 லட்சம் தருவதென முடிவு செய்துள்ளதாகத் தனது மனைவியிடம் கூறுகிறார். கணவனே கண்கண்ட தெய்வமென வாழும் வடிவாம்பாள் மறுக்கவில்லை.. மறுநாள் காலையில் கலெக்டரிடம், பாலங்கட்ட ஆகும் மொத்தச் செலவையும் தாமே ஏற்றுக் கொள்வதாக வாக்குக் கொடுக்கின்றார். சொன்னதுடன் வெள்ளித் தாம்பாளத்தில் தன் மனைவி தந்த தங்க நகைகளையும், கொஞ்சம் பணத்தையும் அச்சாரக் காணிக்கை என்று சொல்லிக் கலெக்டரிடம் கொடுக்கின்றார்...

வெள்ளையன்–கருப்பன் பேதங்கள் காணாமற் போகின்றன. மரபுகள் உடைகின்றன. கலெக்டர், முதலியாரை அப்படியே ஆர சேர்த்து ஆலிங்கனம் செய்து பேச வார்த்தையின்றித் தவிக்கின்றார்... பாலத் திருப்பணிக்கு தனி மனிதர் தந்த நன்கொடை திருநெல்வேலி மாவட்டத்தையே திகைக்கச் செய்தது வரலாற்று உண்மை...

கலெக்டர் புது உத்வேகத்துடன் செயல்படுகின்றார். பாலமும் கட்டி முடிக்கப்படுகின்றது. இன்றும் அது **“சுலோச்சன முதலியார் பாலம்”** என்று தான் அழைக்கப்படுகிறது... திறப்பு விழாவில் சுலோச்சன முதலியார் முன் நடக்க, கலெக்டர் உட்பட மற்றவர்கள் பின் நடந்த செய்தியும் உண்டு...

# மனவளக்கலை ஒரு பார்வை



முனைவர் திருமதி சூரியகலா குமார், புதுக்கோட்டை

மனவளக்கலை என்று சொல்லும் போதே இது மனதை வளமாக்கும் கலை என்றாகிறது. நாம் அனைவரும் மனம், சொல் செயலால்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். மனதில் எழும் எண்ணங்களே சொல்லாகி, செயலாகி நம் வாழ்க்கையை நடத்திச் செல்கிறது. நாம் வாழும் வாழ்க்கை திருப்திகரமாக, சிறப்பாக இருக்கிறதா? எத்தனை பேர் இதற்கு ஆம் என்று சொல்லுவோம். நம் வாழ்க்கை சிறப்பாக, அமைதியாக, பயனுள்ளதாக இருக்க அதன் அடிப்படையாக உள்ள மனம் வளமாகவும், தெளிவாகவும் இருக்க வேண்டும். மனம் மட்டுமின்றி உடலும் ஆரோக்கியமாக, வலுவாக இருக்க வேண்டும். இந்த உடல் நீண்ட நாட்கள் ஆரோக்கியமாக இருப்பதற்கு உடற்பயிற்சி அவசியமாகிறது. பொதுவாக வாழ்க வளமுடன் என்று அடையாளமாகக் கூறப்படும் மனவளக்கலையில்;

**உடற்பயிற்சி**

உடலில் இரத்த ஓட்டம், காற்றோட்டம், வெப்ப ஓட்டம் இவை சீராக இயங்கி உடலின் அனைத்து உறுப்புகளும் ஆரோக்கியமாக இயங்க.

**காயகல்பம்**

காயம் என்ற உடலை உறுதிப்படுத்தி நீண்ட ஆயுளையும், நோயற்ற உடலையும் பெற.

**அகத்தவம்**

மனதை ஒருநிலைப்படுத்தி, எண்ணங்களை ஒழுங்குபடுத்தி, நமது கர்ம வினைகளை நீக்கி இறைநிலையை உணர்ந்து அனுபவிக்க.

**அகத்தாய்வு**

எண்ணம் ஆராய்தல், ஆசை சீரமைத்தல், சினம்


உ
வாழ்க வளமுடன்
லெட்சுமி பைனான்ஸ்
நகை அடகு கடை
55, மேலரத வீதி, பொன்னமராவதி
கூடுதல் தொகை
குறைந்த வட்டி
அதிக பாதுகாப்பு
தங்க நகை கடனுக்கு....
வட்டி 1.50★ மட்டுமே!
★ நிபந்தனைக்குட்பட்டது
உங்கள் பணத்தை பாதுகாக்க...
FIXED DEPOSIT உண்டு!
முத்தான 3 திட்டங்கள்
மாத பென்சன் திட்டம் - 9% வட்டி
(ஒவ்வொரு மாதமும் வட்டி பெறலாம்)
ஆண்டு டெபாசிட் திட்டம் - 12% வட்டி
5.5 ஆண்டு 1+1 திட்டம் - 18% வட்டி
(டெபாசிட் தொகையை 2 மடங்காக திரும்ப பெறலாம்)
சிறப்பு சலுகை
ஊக்கப்பரிசு
ஏப்ரல், மே மாதங்களில் செய்யும் டெபாசிட்டுக்கு...
உடனடி ஊக்கத்தொகை 1.00% உண்டு
PL.A. ஜுவல்லர்ஸ்
செட்டியார் நகை கடை & அடகு கடை
55, மேலரத வீதி, பொன்.புதுப்பட்டி, பொன்னமராவதி
சீல்
PL
916
HALLMARK CERTIFIED JEWELLERY
916, KDM ஹால் மார்க்
தங்க நகை வியாபாரம்
மேலும் விபரங்களுக்கு 98425 20519 98421 34567

தவிர்த்தல், கவலை ஒழித்தல் என்ற அடிப்படையில் நாள்தோறும் நமக்கு நாமே ஆராய்ந்து, நம் தவறுகளைத் திருத்திக் கொண்டு முழுமையான மனிதனாக வாழ.

**குணநலப்பேறு**

மேலே சொன்ன அனைத்தையும் தினசரி மேற்கொண்டு காமம், குரோதம், மோகம், உலோபம், மதம், மாச்சர்யம் என்ற ஆறு தீய குணங்களையும் விடுத்து, உணவு, உழைப்பு, உறக்கம், எண்ணம், புணர்ச்சி இவற்றில் அளவு முறை காத்து; அனைத்து உயிர்களிடத்தும் அன்போடும் கருணையோடும் உறவாட என்றவாறு இவை அனைத்தையும் படிப்படியாக பயிற்றுவித்து நாம் முழுமைப்பேறு பெற வழிகாட்டுகிறார்கள். நாம் நம் குழந்தைகளை Pre KG, LKG, UKG என்று தொடங்கி பட்டப்படிப்பு அல்லது அதற்கு மேலும் படிக்க வைக்கிறோம். இந்தக் கல்வியானது பெரும்பாலும் பொருள் ஈட்டுவதற்கும், ஒரு நல்லவேலையில் அமர்ந்து மதிப்போடு வாழவும் பயன்படுகிறது.

அவ்வாறின்றி தனி மனித அமைதிக்கும், ஒழுக்கத்தோடு வாழ்வதற்கும், குடும்பத்தில் அமைதி நிலவவும், நம் பிறவியின் நோக்கத்தை உணர்ந்து கொள்வதற்கும், பிறவுயிரையும் தன்னுயிர்போல் மதித்து நடத்தவும், யாருக்கும் எண்ணம், சொல், செயலால் கெடுதல் நினைக்காமல், தன்னால் முடிந்தவரை இந்த சமூகத்திற்குத் தொண்டாற்றவும் தேவையான வாழ்க்கைக் கல்வியை இந்த மனவளக்கலை மூலம் பெறலாம்.

அறநெறி தவறாமல் வாழ்ந்து வரும் நம் சமூகத்தினர் ஆண், பெண், குழந்தைகள் ஒவ்வொருவரும் இதைக் கற்றுக் கொள்வதன் மூலம் நம் உடல்நலம், மனநலம், குடும்ப நலம் மேலோங்கி நாம் இன்னும் பண்பட்டவர்களாக, உயர்ந்த நிலையை அடைய முடியும். இப்போது எடுத்துக் கொண்டால் கூட நம்மவரில் ஓரளவு இதில் பயிற்சி பெற்று பயன் பெறுவோர் இருக்கிறார்கள். ஆனால் நமது ஒட்டு மொத்த சமுதாயத்தினரும் மனிதனை மாமனிதனாக்கும் இதனைக் கற்றுப் பயன் பெறுவார்களேயானால் அது எவ்வளவு நன்மை பயக்கும்.

**கற்கும் முறை :**

இந்த மனவளக்கலையை அதிக சிரமம் இன்றி தாங்கள் வசிக்கும் இடங்களில் அல்லது அருகில் உள்ள நகரங்களில் (பொன்னமராவதியில் அரிமா நகரில்) உள்ள மனவளக் கலை மன்றங்களை அணுகி 10,12 நாட்கள் சென்றால் (தினம் 1 மணி நேரம்- 2 மணி நேரம்) அடிப்படைப் பயிற்சி கற்றுக் கொள்ளலாம். உடற்பயிற்சி, காயகல்பம், 2, 3 தியானமுறைகள் அடங்கும். அடுத்து அகத்தாய்வு 1,2,3 என்ற மூன்று நிலைகள் ஒவ்வொரு வகுப்பும் 2 நாட்களுக்கு இருக்கும். அதை முடித்த பின் பொள்ளாச்சி அருகே உள்ள ஆழியாரில் உள்ள அறிவுத்திருக்கோவிலுக்குச் சென்று 3 நாட்கள் தங்கியிருந்து **பிரம்மஞானம்** என்ற வகுப்பில் கலந்து கொள்ளலாம். இதையும் முடித்துவிட்டால் அடுத்து ஆழியாரில் நடைபெறும் 3 நாட்களுக்கான அருள் நிதியர் வகுப்பு முடித்தால் நீங்களும் ஒரு மனவளக்கலை ஆசிரியராகிவிடலாம். அதன்பின் 8 வயது முதல் 80 வயது வரை உள்ள ஆண், பெண் அனைவருக்கும் தாங்கள் இந்த மனவளக்கலையைக் கற்பிக்கலாம்.

வாய்ப்பும் வசதியும் நேரமும் இருப்பவர்கள் ஆரம்பநிலை அடிப்படைப் பயிற்சியைக் கூட ஆழியாரில் சென்று தங்கி கற்றுக்கொள்ளலாம். அங்கு வாரத்தின் 5 நாட்களும் என்று வருடம் முழுவதும் (பெரும்பாலும்) நடைபெறும். இனிவரும் மாதங்களில்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **மே மாதம்** | 1.5.24 to 5.5.24 | 8.5.24 to 12.5.24 | 15.5.24 to 19.5.24 | 22.5.24 to 26.5.24 | 29.5.24 to 2.6.24 |
| **ஜுன் மாதம்** | 5.6.24 to 9.6.24 | 12.6.24 to 16.6.24 | 19.6.24 to 23.6.24 | 26.6.24 to 30.6.24 | |
| **ஜுலை மாதம்** | 3.7.24 to 7.7.24 | 10.7.24 to 14.7.24 | 17.7.24 to 21.7.24 | 24.7.24 to 28.7.24 | |

| | | | |
|---|---|---|---|
| **ஆகஸ்ட் மாதம்** | July 31 to 4.8.24 | 7.8.24 to 11.8.24 | 21.8.24 to 25.8.24 |

வரை நடக்க இருக்கிறது. முதல் நாள் 5 மணிக்குள் சென்றுவிட வேண்டும். 5 நாட்களுக்கு உணவு, தங்குமிடம், பயிற்சி சேர்த்து ரூ.5000/- க்குள் வரும். தொடர்பு கொள்ள போன் நம்பர் 04253-288744, 04253-288755, 7598259733 & 6379282565

இது தவிர ஒவ்வொரு மாதம் முதல் சனி, ஞாயிறு- அகத்தாய்வு-1, 2 வது சனி, ஞாயிறு அகத்தாய்வு-2, 3 வது சனி, ஞாயிறு -அகத்தாய்வு-3 என்றும் நடத்துகிறார்கள்.

இவ்வாறு பகுதி பகுதியாகப் போகாமல் 22 நாட்கள் மொத்தமாகத் தங்கியிருந்து மேற்சொன்ன அனைத்து பயிற்சிகளையும் முடித்துவர Sky Wellness Course நடத்துகிறார்கள். இது சம்பந்தமாகத் தொடர்பு கொள்ள அலைபேசி எண்கள் 63792 82565 & 75982 38733 இது தவிர அவ்வப்போது காயகல்பப் பயிற்சியும் ஒரு நாளைக்கு மட்டும் நடத்துகிறார்கள். அடிப்படைப் பயிற்சி இல்லாவிட்டாலும் கூட இதில் கலந்து கொள்ளலாம்.

அகத்தாய்வு 3 ஆம் நிலை முடித்தவர்கள் **மௌன நோன்பு** என்ற ஒருவாரப் பயிற்சியில் கலந்து கொண்டு பயன்பெறலாம். ஒரு வார காலத்திற்கு வாய் திறந்து எதுவும் பேசாமல் வகுப்பில் பேராசிரியர்கள் கூறுவதைக் கேட்டுக் கொண்டு மௌனமாக அனைத்தையும் அசைபோட்டுக் கொண்டும், சிந்தித்துக் கொண்டும் தெளிவு பெற்று வருவதும் ஒரு புதிய சுகமான அனுபவம். இது தவிர ஒரு மாத ஆரோக்கிய மேம்பாட்டு முகாம். எந்த நோயாக இருந்தாலும் முதல் நாள் அனைத்துப் பரிசோதனைகளையும் செய்து, அவ்வப்போது வாரம் இருமுறை Sugar Test-ம் எடுத்து, பாரம்பரிய உணவு, நமது வழக்கமான டீ, காபி, பால் கிடையாது. அதற்குப் பதில் லெமன் டீ, சுக்கு மல்லி காபி, சூப் போன்றவை. திரும்ப 25 நாளில் மீண்டும்

அனைத்து பரிசோதனைகளும் இதனிடையே தினம் ஒரு மருத்துவர் வந்து வகுப்பு நடத்துவார். சிரிப்பு, யோகா, மியூசிக் தெரபி, ஒரு நாள் Picnic என்று அனுபவித்து வரலாம். இதற்கு அனைத்தும் சாப்பாடு, தங்குமிடம், பயிற்சி, டெஸ்ட் சேர்த்து ரூ.30,000/- (ரூபாய் முப்பதாயிரம்) ஆகும்.

தொடர்பு கொள்ள: அ/நி R. குற்றாலம் 9442130679

Dr.V.M. ராஜசேகரன் 9865278544

Dr.S. சாந்தி 94871 64611

மற்றும் Sky Research Centre 6369319691, 94879 22437.

மேற்கூறிய அனைத்துப் பயிற்சிகளிலும் கலந்து கொண்டு பயன் பெற்றவள் என்ற முறையில் நான் பெற்ற இந்த நற்பயனை நீங்கள் அனைவரும் பெற்று வாழ்வில் மன மகிழ்ச்சியும், மன நிறைவும் பெற்று அமைதியோடும், நிம்மதியோடும் வாழ வேண்டும் என்ற நல்ல நோக்கத்தோடுதான் இக்கட்டுரையை எழுதுகிறேன். எனக்குத் தூண்டுகோலாக இருந்து வழிகாட்டி ஊக்கப்படுத்தி இன்று நான் இந்த Sky Yogaல் ஒரு துணைப் பேராசிரியர் (ப) என்ற அளவுக்கு என்னை உயர்த்தியவர்கள் இருவர். நம் மதிப்பிற்குரிய அருவியூர்த் தந்தை என்று பாராட்டப்படும் தெய்வத்திரு நல்ல சுப்பையா அவர்களின் மகன், பேராசிரியர் திரு பார்த்திபன் அவர்களும், அவர்களின் மனைவி திருமதி செந்தாமரை அவர்களும் ஆவார்கள். அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்தக் கட்டுரையைப் படிக்கும் ஒவ்வொருவரும் மனவளக்கலையில் பயிற்சி பெற்று தங்களைப் பண்படுத்திக் கொண்டு, பலப்படுத்திக் கொண்டு மகிழ்ச்சியாக வாழ்ந்து பயன்பெறுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

**வாழ்க வையகம்! வாழ்க வளமுடன்!**



# சுவாமி விவேகானந்தர்

திருமதி ஆனந்த செல்வம், சென்னை-61



மேற்கு வங்காளம் கொல்கத்தாவில் 1863 ஆம் ஆண்டு ஜனவரி 12-ஆம் தேதி விஷ்வநாத தத்தா என்பவருக்கும் புவனேஸ்வரி தேவிக்கும் மகனாக விவேகானந்தர் பிறந்தார். இவருக்கு தாய் தந்தை இட்ட பெயர் நரேந்ரநாத் தத்தா. குழந்தை பருவத்திலேயே குறும்புத்தனத்துடனும், ஞானத்துடனும் விளையாட்டு பிரியராகவும் இருந்திருக்கிறார். அப்போதே துறவிகள் மீது பெரிய மரியாதை இவருக்கு இருந்திருக்கிறது. விட்டுக்கொடுக்கும் மனப்பான்மையும் இவருக்கு இருந்திருக்கிறது. அது மட்டும் அல்லாது தியானம், இசையிலும் நாட்டம் கொண்டவராக திகழ்ந்துள்ளார். வாரனாசி, அயோத்தி, ஆக்ரா, பிருந்தாவனம் போன்ற பல இடங்களுக்குச் சென்று வந்தார். சுற்றுப்பயணத்தின்போது நல்லவை, தீயவை அறிதல் சமுதாயப்பார்வை, ஆன்மீகம், பகுத்தறியும் ஆற்றல் இருந்ததால் மகாராஜா கேத்ரி என்பவர் இவருக்கு விவேகானந்தர் என பெயர் சூட்டி மகிழ்ந்தார். மக்களும் அவ்வாறே அழைத்தனர். சுற்றுப்பணத்தின்போது அரண்மனை மற்றும் குடிசைகளிலும் தங்கியுள்ளார். இந்தியாவின் பல கலாச்சாரம் உடைய பலவித மனிதர்களின் நெருக்கம் ஏற்பட்டதால் சமுதாயத்தில் ஏற்றத்தாழ்வு, வகுப்பு வித்தியாசங்களை உணர்ந்தார். இந்தியாவை ஒருமைப்படுத்த விரும்பினார்.

1879 இல் பள்ளிப்படிப்பை முடித்து கல்கத்தாவில் உயர்படிப்பை முடித்தார். தத்துவ படிப்பையும் படித்தார்.

இவருக்கு ஆன்மீகம் பற்றி பல சந்தேகங்கள் எழுந்தன. சிறிது நாளில் ராமகிருஷ்ண பரமஹம்சர் பற்றி அறிந்தார். ராமகிருஷ்ணர் காளி கோவிலில் பூசாரியாகவும், சிறந்த பக்தராகவும் இருந்தார். ஒருமுறை ராமகிருஷ்ணரைப் பார்த்து கடவுளை பார்த்திருக்கிறீர்களா என்று கேட்டார். உடனே நான் கடவுளை உன்னைப் பார்ப்பது போல் பலமடங்கு தெளிவாக பார்த்திருக்கிறேன் என்றார். இதைக் கேட்ட விவேகானந்தருக்கு புதிராகவும், அதிர்ச்சியாகவும் இருந்தது. ராமகிருஷ்ணர் கூறும்போது ஒருவித தெளிவும், உண்மையும் தெரியவே இவரை அடிக்கடி சந்தித்தார். எதையும் முற்றிலும் அறிந்தபின் அதை சோதித்துப் பார்க்கும் குணம் அவருக்கு இருந்தது. ஒருவர் ஆன்மீக துறவி என்றால் பண ஆசை, பெண் ஆசை தவிர்க்க வேண்டும் என ராமகிருஷ்ணர் சொன்னது நினைவுக்கு வந்தது. ஒரு நாள் ராமகிருஷ்ணர் தலையணையின்கீழ் ஒரு ரூபாய் நோட்டை மறைத்து வைத்தார் விவேகானந்தர். ராமகிருஷ்ணர் படுக்கையில் படுக்க மறுகணமே அவருக்கு தேள் கடித்தது போல் இருந்தது. உடனே படுக்கையை எடுத்து தலையணையை உதறும்போது ஒரு ரூபாயை பார்த்தார். பார்த்ததும் இச்செயல் விவேகானந்தருடையது என்பதை அறிந்தார். பின் விவேகானந்தர் ராமகிருஷ்ணரை தன் குருவாக ஏற்று அத்வைத வேதத்தை 5 ஆண்டுகள் பயிற்சி மேற்கொண்டார். 1886 இல் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் இறைவனடி சேர்ந்தார்.அதன்பின் சீடர்கள் ஒன்று சேர்ந்து துறவறம் பூண்டு ஒரு வீட்டில் வாழ்ந்து வந்தனர்.

1893 ஆம் ஆண்டு அமெரிக்காவில் சிக்காக்கோ நகரில் நடைபெற்ற உலக மதங்கள் மாநாட்டில் கலந்து கொண்டார். மேடையில் இவர் பேச்சின் தொடக்கத்தில் கூடியிருந்த மக்களைப் பார்த்து சகோதர சகோதரிகளே என்று தொடங்கியதற்காக பரிசும், பாராட்டும் பெற்றார். மாநாட்டில் குழுமியிருந்த மக்களை தனது பேச்சுத் திறமையால் மெய்மறக்கச் செய்தார். இங்கிலாந்து சென்றார் இவருக்கு பல சீடர்கள் இருந்தனர் அவர்களில் முக்கியமானவர் நிவேதிதா. மேலை நாடுகளுக்கு சென்று வந்த விவேகானந்தர், அழுத்தமான பேச்சு, கம்பீரம், நடை உடை இன்றளவும் முக்கியத்துவம் பெறுகிறது. கல்கத்தாவில் பேலூரில் 1902 ஆம் ஆண்டு ஜூலை அன்று இறைவனடி சேர்ந்தார்.

உ

ஸ்ரீ வயிரவ சுவாமி துணை

வாழ்த்துகளுடன்

கடை: 94432 06431
97867 46431

வீடு: 97874 81103



# சிவசக்தி ஸ்டோர்ஸ்

279, அண்ணாசாலை,

**பொன்னமராவதி.**

**மளிகை, ஆயில், ஸ்டேசனரி மற்றும்**
**குளிர்பானங்கள் மொத்தம் & சில்லறை**

# அன்னம் டிரேடர்ஸ்





வடுகநாதன் ரோடு,
KVB பேங்க் அருகில்,
**பொன்னமராவதி.**

ஸ்டாக்கிஸ்ட்:
**நெஸ்டில், மைசூர் சோப்,**
**ராஜம் சுக்கு காபி,**
**பண்ணாரி மைதா.**

# ராநா கெஸ்ட் ஹவுஸ்

KVB பேங்க் அருகில், **பொன்னமராவதி.**

முற்றிலும் குளிரூட்டப்பட்ட (A/C) ரூம்கள்,
சிறிய பெரிய அளவுகளில், நிறைந்த வசதிகளுடன்,
நிறைவான கட்டணத்தில்,
நகரின் மத்தியில் தரமான தங்கும் விடுதி.



# பாடும் பறவையைப் பாடு



**காகம்** (காக்கை)

காகம் தூய்மை காகம் பாப்பா
ஏகமாய் ஒழுக்கம் ஏற்கும் பாப்பா
ஆகாயத் தோட்டி அருமை பாப்பா
வேகமாய் பறக்கும் விந்தை பாப்பா
பகுத்தே உண்ணும் பண்பே பாப்பா
வகுத்துக் காகம் வாழும் பாப்பா
உணவைக் காகம் உண்ணும் பாப்பா
இணையாம் உற்றார் இணைந்தே பாப்பா
கால மறியும் காகம் பாப்பா
மேலாம் முன்னோர் மீள்வடிவே பாப்பா
அறிவுக் காகம் அதுபார் பாப்பா
நெறியாய் வாழ்வை நேரறி பாப்பா

- JK. தீக்ஷா,
பெங்களூரு

## இணைய மோசடிகளுக்கான உதவி எண்



நீங்கள் இணைய மோசடிக்கு ஆளானால் இணைய மோசடி களுக்கான **தேசிய உதவி எண் 1930** ஐ உடனடியாக அழைக்கவும். பணம் மாற்றப்பட்ட கணக்கை போலீசார் கண்காணித்து பணத்தை திரும்பப் பெற முயற்சிப்பார்கள்.

– ஆசிரியர் குழு

## புழுதிபட்டி அருவியூர் வடக்குவளவு நகரத்தார் சங்க

# 50 ஆம் ஆண்டு பொன்விழா நிகழ்வுகள்

16-01-2024 (தை மாதம் 2 ஆம் நாள்) செவ்வாய்க்கிழமை புழுதிபட்டி அ.வ.ந. சங்கம் 50 ஆம் ஆண்டு விழா பொன் விழா ஆண்டாக சிறப்பாக கொண்டாடப்பட்டது. விழாவிற்கு சங்கத் தலைவர் திரு ச. இராமநாதன் அவர்கள் தலைமை ஏற்றார். துணைத்தலைவர் திரு மு. சாமிநாதன் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார். சங்கச் செயலாளர் திரு தேவராசன் அவர்கள் ஆண்டறிக்கை தாக்கல் செய்தார். தலைவர் ச. இராமநாதன் அவர்கள் தலைமை உரையில் கடந்த 50 ஆண்டுகளாக சங்கத்தின் செயல்பாடுகள், வளர்ச்சிப் பணிகள், நகரத்தார்கள் ஒருங்கிணைந்து ஆற்றிய கிராம மக்களின் சேவைகளைப் பற்றிய விபரங்களை விரிவாக எடுத்துக் கூறினார்.

சங்கத்தின் வளர்ச்சிக்கு மிகவும் அர்ப்பணிப்போடு செயலாற்றிய முன்னாள் நிர்வாகிகள் அனைவரும் பாராட்டி கௌரவிக்கப்பட்டார்கள். சங்க உறுப்பினர்கள், நகரத்தார் களுக்கு பொன்விழா நினைவுப் பரிசுகள் வழங்கப்பட்டன. புழுதிபட்டி சங்க உறுப்பினர்களில் சிறந்த சாதனையாளர் திருமதி டாக்டர் சூரியகலா குமார் அவர்கள் டாக்டர் பட்டம் பெற்றமைக்காக பாராட்டப் பெற்றார். மற்றும் இரண்டு சாதனையாளர்கள் திரு செ. கௌரிசங்கர், திரு செ. ஸ்ரீ மங்கைபாகர் ஆகியோர்கள் தட்டச்சு, சுருக்கெழுத்து இவைகளில் தேர்ச்சி பெற்று சாதனை நிகழ்த்தியதால் ரயில்வே துறையிலும், ஜிப்மர் மருத்துவ மனையிலும் வேலை பெற்றார்கள். இவர்களையும் சங்கம் வெகுவாகப் பாராட்டி கௌரவப்படுத்தின. மேலும் பள்ளி இறுதி வகுப்பு பொதுத் தேர்வில் சிறந்த முறையில் தேர்ச்சி பெற்ற M. விஷால், R. ஆரியா ஸ்ரீ ஆகியோர்களுக்கு பரிசுகள் வழங்கப்பட்டன.

புழுதிபட்டி இளந்தென்றல் அணியினர் சங்க நிர்வாகத்தைப் பாராட்டி நினைவு கேடயம் வழங்கினார்கள்.

இளந்தென்றல் அணியினர் ஏற்பாடு செய்த கலைநிகழ்ச்சி, விளையாட்டுப் போட்டிகள் சிறப்பாக அமைந்திருந்தது. சங்கத் துணைச் செயலாளர் திரு நா. மகாலிங்கம் விருந்தோம்பல் பணியினை சிறப்பாக செய்திருந்தார். சங்க துணைச்செயலாளர் திரு சுப. முத்து அவர்கள் நன்றி கூற விழா இனிதே நிறைவு பெற்றது.

**தகவல் : திரு ச. இராமநாதன், தலைவர் அ.வ.ந. சங்கம், புழுதிபட்டி.**

## புங்கைப் பூ உருவானது எப்படி?





ஒரு முறை புங்கை என்ற பெண்ணிற்கு சிவபெருமான் அருள் செய்ய முடிவு செய்கிறார். இவர் ஒரு தேவதாசிப் பெண். சிவன் மீது பக்தி செய்து வாழ்ந்து வந்தாள். சிவன் வயதானவர் வேடத்தில் சென்று இவள் தன் கடமையை எப்படி செய்கிறாள் என்பது குறித்து சோதிக்கிறார். அவ்வாறு சோதனை செய்தபோது சிவன் தன் பார்வதி தேவியுடன் காட்சி தந்து, "உனக்கு என்ன வரம் வேண்டும்? கேள்" என்று கேட்கிறார்.

புங்கையும், "உங்கள் திருவடிக்கு முன் என் சிரசு இருக்க வேண்டும் என்று கேட்க நினைத்ததை மாற்றி கேட்டு விடுகிறாள். அதவாது என் பாதம் முன் உங்கள் சிரசு இருக்க வேண்டும் என்று கேட்கிறாள். பிறகு தன் தவறை உணர்ந்து "சிவபெருமானே! என்னை மன்னிக்கவும். உங்க பாதம் முன் என் சிரசு இருக்க வேண்டும்" என்கிறாள்.

அதற்கு சிவன், "முதலில் நீ கேட்டதை தந்து விட்டேன். இனி மாற்ற முடியாது" என்கிறார். "பூமியில் புங்கைப்பூ உன் பாத வடிவில் உண்டாகும். உன் பக்தியின் பெருமை நிலைத்து நிற்கும். போய் வா" என்று ஆசி தந்து அனுப்பி விடுகிறார் சிவன்.

**தகவல் : அ. அலங்கார குமரன், K. புதுப்பட்டி**

# முதலாமாண்டு நினைவஞ்சலி
## 21.03.2024

அன்னை நீயே அக்கா உறவில்
அன்பைத் தந்த சுதந்திரமே!
என்னை மகனாய் ஏற்றே வளர்த்த
எந்தன் சுவாசம் சுதந்திரமே!
நன்மை செய்தே நாளும் வாழ்ந்தாய்
நாங்கள் வணங்கும் சுதந்திரமே!
என்றன் உயிரே என்றும் நீங்கள்
என்னுள் வாழும் சுதந்திரமே!
தூண்டு கோலாய் துடிக்கும் மனமாய்
துணையாய் இருந்த சுதந்திரமே!
ஆண்டு ஒன்று அசைந்தே போச்சு
அமுதம் படைத்தோம் சுதந்திரமே!
வேண்டி நாங்கள் விண்ணில் நீயே
வருவாய் அருள்வாய் சுதந்திரமே!
மாண்டார் பின்னே மண்ணில் பிறப்பார்
மடியில் தவழ்வாய் சுதந்திரமே!



**சுதந்திரம் என்ற மீனா**



**– அன்புத் தம்பி கவிஞர் கு. கணேசன்**

---

# பள்ளி அளவில் தங்கப்பதக்கம்



சென்னை நங்கநல்லூரில் வசிக்கும் திரு தினேஷ் – திருமதி திவ்யா அவர்களின் புதல்வன் **தி. ரித்திக்** 4 ஆம் வகுப்பில் பொதுத் திறமையில் முதல் மாணவனாகவும், **இன்டர்நேஷனல் மேதமெடிக்ஸ் ஒலிம்பியார்ட்** (Internation Mathematics Olympiard) இல் பள்ளி அளவில் தங்கப்பதக்கமும் பெற்றுள்ளார்.

மேலும் இவர்களின் புதல்வி **தி. வர்ணிகா** 1 ஆம் வகுப்பில் **பொதுத் திறமையில்** (General proficiency) இரண்டாவது மாணவியாக பரிசு பெற்றுள்ளார்.

**தகவல் : திரு தினேஷ், நங்கநல்லூர், சென்னை.**

# எது வெற்றி?



திருமதி சே. இராமதிலகம், வட்டாரக் கல்வி அலுவலர், பொன்னமராவதி

4 வயதில் தனியாக நடக்க முடிந்தால் அது வெற்றி!

8 வயதில் தனியாக வெளியே சென்று வழி தவறாமல் வீடு திரும்பினால் அது வெற்றி!

12 வயதில் நல்ல நண்பர்கள் கிடைத்தால் அது வெற்றி!

18 வயதில் வாகன ஓட்டுனர் உரிமம் பெற்றால் அது வெற்றி!

22 வயதில் பட்டதாரியாக பல்கலைக்கழகத்திலிருந்து வெளியேறினால் அது வெற்றி!

25 வயதில் நல்ல வேலை கிடைத்தால் அது வெற்றி!

30 வயதில் தனக்கென குடும்பத்தை அமைத்துக் கொள்ள முடியுமானால் அது வெற்றி!

35 வயதில் போதுமான அளவு சம்பாதிக்க முடியுமானால் அது வெற்றி!

45 வயதில் இளைஞரைப் போன்ற உருவத்தை தக்க வைக்க முடியுமானால் அது வெற்றி!

50 வயதில் தன் பிள்ளைகளுக்கு நல்ல கல்வியை அளிக்க முடியுமானால் அது வெற்றி!

55 வயதில் நம் கடமைகளை தொடர்ந்து சரியாக செய்ய முடியுமானால் அது வெற்றி!

60 வயதில் ஓய்வு பெற வேண்டியவர் என நிராகரிக்கப் படாமல் செயலாற்ற முடியுமானால் அது வெற்றி!

65 வயதில் நோயில்லாமல் வாழ முடியுமானால் அது வெற்றி!

70 வயதில் மற்றவர்களுக்கு பாரமில்லாமல் வாழ முடியுமானால் அது வெற்றி!

75 வயதில் பழைய நண்பர்களுடன் உறவாடி மகிழ முடியுமானால் அது வெற்றி!

# புதிய கல்விக் காவலர்கள்

## கல்விக்காவலர்-45



நாவலூருடையார்
**வே. சண்முகநாதன் செட்டியார் - குஞ்சரத்தம்மை ஆச்சி**
உலகம்பட்டி

### கல்விக்காவலர் குடும்பத்தினர்

திரு ச . சதாசிவம் செட்டியார் – ஜெயமணி ஆச்சி

**சகோதரி :**

மீனாட்சி ஆச்சி

**மகள் :**

பொன்மலர் – ரவி கணேசன்

**மகன்கள் :**

ச. சண்முகவேல் – மீனாட்சி
ச. வைரவ பாண்டியன் – சத்தியா

## கல்விக்காவலர் - 46



கழனிவாசலூருடையார்
தெய்வத்திருவாளர்கள்
**அரு.அறிவுச் செல்வன் - அ. பாக்கியம்**
மூத்த மகள் தெய்வத்திருமதி **சுப. பரிமளம்**

### கல்விக்காவலர் குடும்பத்தினர்

1. தெய்வத்திருமதி சுப. பரிமளம் – நலமுடன் குழ. சுப்பிரமணியன்
2. அறி. மனோகரன் – தேன்மொழி
3. க. கலைமணி – சே. கண்ணப்பன்
4. ந. சித்ரா – அ. நடராஜன்

## கல்விக்காவலர் - 47



மேலூருடையார்
திரு **அ.கு. நடராஜன் செட்டியார் -**
தெய்வத்திருமதி.
**ந. மீனாம்பாள் ஆச்சி,** சொக்கம்பட்டி.

### கல்விக்காவலர் குடும்பத்தினர்

**மகன்கள் – மருமகள்கள் :**

1. K.N. ரகுபதி செட்டியார்–உஷா நந்தினி, சொக்கம்பட்டி.
2. K.N. பூபதி செட்டியார் – க. சங்கர ஜெயந்தி, மதுரை

**பேரன்–பேத்திகள் :**

R. இலக்கியா – V. சண்முகநாதன்
R. செல்வ மீனாள் – R. உதயகுமார்
R. வெங்கடேஷ் – நந்தினி
N.B. ராகுல்

## கல்விக்காவலர் - 48



மேலூருடையார்
தெய்வத்திரு
**க.அ. அலங்காரம் செட்டியார்**

### கல்விக்காவலர் குடும்பத்தினர்

**பேரன்கள் :**

1. க.அ.அ.செ. ஆசை அலங்காரம் – கண்ணகி
2. க.அ.அ.செ. இளங்கோவன் B.E. – மாதவி

**கொள்ளுப் பேரன்கள் :**

1. இ. விஜய் அலங்கார் B.E.– பாக்யலெட்சுமி M.B.A
2. ஆ. சபரி அலங்கார் B.E. – யுவராணி B.E.

## கல்விக்காவலர் - 49



மேலூருடையார்
**Rm.A. கண்ணன் செட்டியார் - க. அன்புபிரியாள் ஆச்சி,** கோவை.

### கல்விக்காவலர் குடும்பத்தினர்

**பெற்றோர் :**

திரு. Rm. அலங்காரம் செட்டியார்–அ. ராஜாமணி ஆச்சி, சிறுகுடி

**மாமனார்–மாமியார் :**

திரு. உ. சதாசிவம் செட்டியார் – நாகஜெயம் ஆச்சி, சிறுகுடி

**மகன்–மருமகள் :**

K. அரவிந்தன் – அ. ஆர்த்தி

## கல்விக்காவலர் - 50



கல்வாசநாட்டு சுந்தர பாண்டியபுரத்து நன்னெறி பூண்டிலுருடையார்
**திரு A.S. முருகேசன் செட்டியார் - மு. கலைச்செல்வி ஆச்சி,** சென்னை.

### கல்விக்காவலர் குடும்பத்தினர்

**மகன் – மருமகள் :**

1. திரு மு. மோனீஷ்குமார் – மோ. அர்ச்சனா, சென்னை

**மழலைச் செல்வங்கள் :**

மோ. ஆருத்ரா, மோ. மேக்னா

2. திரு மு. பிரகாஷ் குமார் – பி. யாமினி, பெங்களூர்

## கல்விக்காவலர் - 51



வரதலூருடையார்
**R. ராமச்சந்திரன் செட்டியார்- ரா. மணிமேகலை ஆச்சி,** கோவை.

### கல்விக்காவலர் குடும்பத்தினர்

**பெற்றோர் :**

திரு. நா. ராசு செட்டியார் – ரா. சொர்ணம் ஆச்சி, கிருங்காக்கோட்டை

**மாமனார் – மாமியார் :**

திரு. உ. சதாசிவம் சட்டியார் – நாகஜெயம் ஆச்சி, சிறுகுடி.

**மகன்–மருமகள் :** ரா. ராகவேந்திரன் – ரா. பிரதீபா

**மகள் – மருமகன் :** ரா. சிவகாமி – Dr. ஜெ. ஜெயபிரதீபன்

## கல்விக்காவலர் - 52



மேலூருடையார்
தெய்வத்திருவாளர்கள்
**செ. செம்பன் செட்டியார் - பொன்னம்மாள் ஆச்சி**

### கல்விக்காவலர் குடும்பத்தினர்

**பேரன் :**

திரு. செ. ராமநாதன் – ரா. பத்மாவதி

**கொள்ளுப் பேரன் – பேத்தி :**

ரா. விஜய் அலங்காரம் – வி. தாரணி

ரா. தீபா – சத்தியசீலன்

உ
சிவமயம்

# வருடாந்திர சிறப்பு வழிபாடு அபிஷேகம்

சிறுகுடி ஸ்ரீ செம்பாயி அம்மன் சமேத மலையலங்கார சுவாமியை இஷ்ட தெய்வமாக வழிபட்டு வரும் (சிறுகுடி, சொக்கம்பட்டி) மேலூருடையார் பங்காளிகள் கூட்டாகச் சேர்ந்து நடப்பு சோபகிருது வருடம் தை மாதம் 3ம் தேதி 17-01-2024 புதன்கிழமை மேற்படி செம்பாயி அம்மன் மலையலங்கார சுவாமி மற்றும் பரிவார தெய்வங்களுக்கும் சிறப்பு என்றழைக்கப்படும் வருடாந்திர சிறப்பு வழிபாடு அபிஷேகம் மற்றும் தூபம், தீபம் ஆராதனைகளுடன் பொங்கலிட்டு வழிபாடு செய்யப்பட்டது. அன்று காலை மதியம் இரண்டு வேளை விருந்துடன், தினை மாவு உள்ளிட்ட காளாஞ்சி அனைவருக்கும் வழங்கப்பட்டன. மேலூருடையார் பங்காளிகள் மாமன் மைத்துனர் மற்றும் ஊர் காரணக்காரர்கள் அனைவருக்கும் தெய்வங்கள் அருளாசி மற்றும் மகிழ்ச்சி தரும் வழிபாடாக அமைந்தது.

**தகவல் : திரு அ. முருகன், நீடாமங்கலம்**

சிங்கம்புணரி (உலகம்பட்டி) அல. அலங்காரம் செட்டியார்–அல. சந்திரா ஆச்சி இவர்களின்

# சஷ்டி பூர்த்தி பீமரத சாந்தி விழா 29-03-2024



















# அருள்மிகு மாதுளவல்லி சமேத அருள்மிகு மதனீஸ்வரர் திருக்கோவில்

## திருப்பணி விபரங்கள்




புதுக்கோட்டை மாவட்டம் திருமயம் தாலுகா, பொன்னமராவதிக்கு வடமேற்கில் அம்மன்குறிச்சி வட்டம் நகரபட்டியிலிருந்து சுமார் 1 கிலோ மீட்டர் தொலைவில்

**கல்லம்பட்டி** கிராமத்தில் எழுந்தருளியிருக்கும்



## அருள்மிகு **மாதுளவல்லி** உடனாய அருள்மிகு **மதனீஸ்வரர்** திருக்கோவில்

மிகவும் தொன்மையானது.

<u>சிவபெருமான் துதி</u>

குனித்த புருவமும் கொவ்வைச்செவ் வாயிற்குமின்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம் போல்மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்த உடையும் எடுத்தப்பொற் பாதமும் காணப்பெற்றால்
மனிதப் பிறவியும் வேண்டுவதே இந்தமாநிலத்தே

அங்கிங்கு எனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்த பரம்பொருள், உயிர்கள்மீது கொண்டுள்ள எல்லையில்லா பெருங்கருணையினால் வான்பழித்து மண்புகுந்து மனிதனை ஆட்கொள்ள விரும்பி அருவநிலை மாறி உருவத்திருமேனியுடன் எழுந்தருளியுள்ள புண்ணிய இடங்களே திருக்கோவில்களாகும். கல்லம்பட்டியில் உள்ள திருக்கோவிலும் அத்தகைய புண்ணியதலங்களில் ஒன்றாகும். இத்தலத்தில் எழுந்தருளியுள்ள அருள்மிகு மாதுளவல்லி உடனாய அருள்மிகு மதனீஸ்வரர், அண்டிவந்து வழிபடும் அனைவருக்கும் வேண்டுவன வழங்கி அருளாட்சி நடத்தி வருகின்றமை நாடு நன்கறிந்த உண்மையாகும்.

இந்த திருக்கோவிலின் சிறப்பு புராணங்களில் குறிப்பிட்டபடி காமதேவன் என்பவர் பிரமதேவனின் மானசீக புதல்வன் என்று கூறப்படுகிறது. காமதேவன் என்பவர் அழகு, ஆசை,கலைகள் இவற்றின் நாயகனாவார்.

புராண வரலாறு : சூரபத்மனின் ஆணவத்தால் அவதியுற்ற தேவர்கள் அவனை அழித்து தேவர்களை இரட்சிக்க முருகப்பெருமானின் அவதாரத்திற்காக சிவபெருமானிடம் தவம் இயற்றி காத்திருந்தார்கள். தவத்தில் இருந்த சிவபெருமான் பார்வதி தேவி செய்த பணிவிடைகளை ஏற்றுக்கொண்டபோதும் தன் தவத்திலிருந்து சிறிதும் கலையாதவராக இருந்தார். தேவர்கள் சூழ்நிலை காரணமாக மன்மதனிடம் சிவபெருமானின் தவத்தைக் கலைக்குமாறு வேண்டினர். காமதேவன் என்று அழைக்கப்படும் மன்மதனும், ஐந்துவித நறுமலர்களான அம்பை வசந்தகாலத்தின் துணையோடு இறைவன் மீது எய்தினார், தவம் கலைந்த சிவபெருமான் தன் மூன்றாம் கண்ணாகிய நெற்றிக்கண்ணை திறந்ததால் வெப்பமும் வேகமும் மிகுந்து மன்மதனை எரித்து சாம்பலாக்கிவிட்டது. .

இதனை அறிந்த மன்மதனின் பத்தினியான ரதிதேவி அனைத்து தேவர்களின் நன்மைக்காகத்தான் தன் கணவர் இவ்வாறு நடந்துகொண்டார். எனவே மன்னித்து உயிர்பிச்சை அளியுங்கள் என்று வேண்டினாள். ரதிதேவியின் வேண்டுகோளுக்கும் கண்ணீருக்கும் மனமிரங்கிய இறைவன் மன்மதனை உயிர்பித்தார். அவன் ரதியைத்தவிர மற்ற யார் கண்களுக்கும் தெரியமாட்டான் என்று உரைத்தார். மன்மதனுக்கு அநங்கன், கந்தர்வன், வசந்தன், போன்ற பிற பெயர்களும் உண்டு. ரதிதேவியின் கணவனாகிய மன்மதன் இத்தலத்தில் சாபவிமோசனம் பெற்றதால், இத்தல இறைவனுக்கு மதனீஸ்வரர் என்ற பெயர் சூட்டப்பட்டதாக ஐதீகம்.

இத்தலத்தில் வீற்றிருக்கும் அருள்மிகு மாதுளவள்ளி உடனாய மதனீஷ்வரரை முறைப்படி வணங்கிவழிபாடு செய்தால் திருமணத்தடைகள் நீங்கும், பொறுத்தமான துணையைப் பெறுவர், கணவன் மனைவி ஒற்றுமை சிறப்பாகும், குடும்ப ஒற்றுமை ஓங்கும், நல்ல குழந்தைகள் பெறுவர், மனக்கவலைகள் நீங்கும் என்பது ஐதீகம். .

இத்தகைய பெருமைபெற்ற இத்திருக்கோவிலுக்கு கல்லம்பட்டி நகரத்தார்கள் கல்லம்பட்டி மற்றும் சுற்றுவட்ட கிராம மக்களின் உதவியுடன் திருப்பணி செய்ய ஏற்பாடு ஆகியிருக்கிறது.

பாண்டியம்பதியின் வளர்ச்சிக்கும் வாழ்வுக்கும் முழுமுதற் காரணமாய் விளங்கிய இரண்டாம் இராசேந்திர சோழன் கி.பி.1156 ல் கோலமிகு திருக்கோவிலாக அமைத்து இங்கு சிறப்புச்செய்தான் என்பதை கல்வெட்டுகள் கூறுகின்றன. பழமையும் சிறப்பும் பொருந்திய இத்திருக்கோவில் பல நூற்றாண்டுகளாக பழுதடைந்திருந்தது.

கல்லம்பட்டி உயர்திரு மு.சி.கி.நாராயணன் செட்டியாரும் அவரது மக்கள் நா.அருள்பிரகாசம், நா.சுப்பிரமணியன் மற்றும் நா.ஜெயராமன் அவர்களும் பெரும்முயற்சி எடுத்து திருப்பணிக்குழு அமைத்து கல்லம்பட்டி, நகரப்பட்டி ஊர் பொதுமக்கள் பேராதரவுடன் கோவில் திருப்பணி வேலைகளை மேற்கொண்டனர்

பெருமைமிகு இத்திருக்கோவிலுக்கு மேலும் அணி சேர்க்கும் வண்ணம் அருள்மிகு மதனீஸ்வரர் கல்மண்டபம் புதுப்பித்தும், புதிதாக அர்த்தமண்டப கோபுரம் எழுப்பியும், அருள்மிகு மாதுளவல்லி அம்மனுக்கு புதிதாக கர்ப்பக்கிரக அர்த்தமண்டபம் கட்டி கோபுரம் அமைத்தும், அருள்மிகு சண்டீஸ்வரருக்கு புதிய விமானம் எழுப்பியும், மஹா மண்டபத்திற்கு ஓட்டுக்கொட்டகை அமைத்தும் மடப்பள்ளி கட்டிடம் புதுப்பித்தும், செய்யப் பெற்றுள்ள திருப்பணிகளால் பொலிவுபெற்றுத் திகழும்

அருள்மிகு **மாதுளவல்லி** உடனாய அருள்மிகு **மதனீஸ்வரர்** சுவாமிக்கு மங்களகரமான துன்மதி ஆண்டு ஆவணித்திங்கள் 3 ஆம் **நாள் (19.08.1981) புதன் கிழமை** காலை நல்வேளையில் ஜீரணோத்தாரண **அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேக விழா** சீரும் சிறப்புமாக நடைபெற்றது.

## ஸ்தல விருட்ஷம் வில்வ மரம்

அருள்மிகு மதனீஸ்வரர் கர்ப்பக்கிரகம் அர்த்தமண்டபம் சுற்றுச்சுவர்களிலும் மேல் பகுதிகளிலும் ஏற்கனவே அமைக்கப் பெற்றிருந்த கருங்கற்களை செவ்வனே தனித்தனியாக எடுத்து, சிறிதும் பழுதடையாமல் மீண்டும் அதேகற்களைக்கொண்டு சுற்றுச்சுவரும் மேற்கூறையும் ஏற்படுத்தியது 1981 ல் மிகச்சிறப்பு வாய்ந்ததாக கருதப்படுகிறது.

கல்லம்பட்டி, திரு.கருப்பையா செட்டியார் அவர்களின் நிதி உதவியுடன் மடப்பள்ளி கட்டிடம் புதுப்பிக்கப்பட்டது. திருக்குளத்தின் படிகள் கல்லம்பட்டி. திருமதி கி.அங்கம்மாள் ஆச்சி அவர்களின் நிதி உதவியுடன் சீர்செய்யப்பட்டது. கோவில் திருப்பணி வேலைகள் பொன்னமராவதி திரு.சொ.அ.மாணிக்கம் செட்டியார் மற்றும் கல்லம்பட்டி திரு.மு.சி.கி.நாராயணன் செட்டியார் இவர்களின் மேற்பார்வையில் சிறப்பாக நடைபெற்றது.

திருஞானசம்பந்தர் : "கண்ணிற் கனலாலே காமன் பொடியாக பெண்ணுக்குள் செய்த பெருமான் உரைகோவில்" என்று அவரது பதிகத்தில் கூறுகிறார் காளிதாசனின் குமார சம்பவத்திலும் இது விவரிக்கப்பட்டிருக்கிறது.

# கல்லம்பட்டி அருள்மிகு மாதுளவல்லி சமேத அருள்மிகு மதனீஸ்வரர் சுவாமிகள் திருக்கோவில் திருப்பணி செலவு மதிப்பீடு

| எண் | விபரம் | ரூபாய் |
|---|---|---|
| 1. | ஸ்ரீ சிவன் கோவில் கோபுரம் கட்டுமானம், பெயிண்ட் கூலி. ஒரு நிலை கோபுரம் | 5,00,000 |
| 2. | ஸ்ரீ அம்பாள் கோவில் கோபுரம் கட்டுமானம், பெயிண்ட் கூலி பேஸ்மெண்ட் | |
| | முதல் ஒரு நிலை கோபுரம் வரை | 5,00,000 |
| 3. | ஸ்ரீ பைரவர், ஸ்ரீ பிள்ளையார், ஸ்ரீ முருகன் சீர்செய்து வைக்க | 1,50,000 |
| 4. | ஸ்ரீ நந்தீஸ்வரர் பீடம் + பலிபீடம்(சீர் செய்ய) | 50,000 |
| 5. | ஸ்ரீ சண்டிகேஸ்வரர் சன்னதி ( சீர்செய்து அமைக்க) கேட் போட கூலி உள்பட | 50,000 |
| 6. | துர்க்கை அம்மன் 1,1/2 அடி சிலை அமைத்து திருவாச்சி, கிரில் கேட் போட கூலி உள்பட | 50,000 |
| 7. | தக்ஷிணமூர்த்தி சிலை சீர்செய்து, திருவாச்சி அமைத்து, கிரில் கேட் போட கூலி உள்பட | 30,000 |
| 8. | மஹாமண்டபம் தரைத்தளம் கிரானைட் கல் பதிக்க, கல் கூலி உள்பட | 2,00,000 |
| 9. | திருச்சுற்று மதில்சுவர் அஸ்திவாரம் + (5 அடி உயரம் 3/4 அடி | |
| | செங்கல் + சிமெண்டு கலவை சுவர்) + (6 அடி உயரம் இரும்பு கிரில்) | |
| | திருச்சுற்று மதில்சுவர் (29+12+4+4+16+28+36) சுமார் 129 அடி | 4,00,000 |
| 10. | தெற்கு பக்கம் அம்மன் சன்னதி 3 அடி அகலம் கிரில் கேட் | |
| | (உயரம் 3 அடி தகரம் + 3 அடி கிரில்) | 10,000 |
| 11. | கிழக்கு முன்கேட்டு நிலை, கதவு கிரில் கேட் (அடியில் 3 அடி உயரம் + தகர சீட்டு) | 10,000 |
| 12. | முன்கேட்டுக்கு மேலே சிவன், அம்பாள் உருவத்துடன் திருவாச்சி அமைக்க | 1,00,000 |
| 13. | மடப்பள்ளி சீர்செய்து அமைத்துதர (சீலிங்க் தரை உள்பட) | 2,00,000 |
| 14. | கோவில் சுற்றுப்பிரகாரம் 4" அகலம் சிமெண்ட் கல் தளம் பதிய (cement pathway) | 1,00,000 |
| 15. | முள்வேலி காம்பவுண்டு (80 அடி× 80 அடி) + கேட் உள்பட | 1,00,000 |
| 16. | இதர செலவுகள் :திருப்பணி வேலை ஆரம்பித்தல், தண்ணீர் குழாய், மோட்டார், | |
| | பைப் லைன் வகையறா மின் விளக்கு, மின்விசிறிவகையறா | 3,00,000 |
| | **புதிய வேலைப்பாடுகள்** | |
| 17. | ஸ்ரீ நவக்கிரக பீடம், 6X6 (சிலை உள்பட) | 1,00,000 |
| 18. | லிங்கோத்பவர் 1 1/2 அடி சிலை அமைத்து, திருவாச்சி, கிரில் கேட் போட கூலி உள்பட | 30,000 |
| 19. | சிவன் முன்னால் சிறிய நந்தி + பலிபீடம் சிலை அமைக்க கூலி உள்பட | 10,000 |
| 20. | மஹாமண்டபம் (32×28) = 896 சதுர அடி + (16×28)= 448 | |
| | மொத்தம் 1344 சதுர அடி சிமெண்ட் கூறை அமைக்க | 19,75,000 |

**கும்பாபிஷேக செலவுகள் : தனி** **மொத்தம் : 48,65,000**

திருப்பணி வேலைகள் ஆரம்பிக்கும் பொருட்டு 11.2.2024 ஞாயிறன்று பூஜை செய்யப்பட்டது.

இத்திருப்பணி சிறப்புடன் நிறைவேற தாங்களும் தங்கள் உறவினர்களும் நண்பர்களும் தங்களால் இயன்ற அளவில் பொருளுதவி செய்து இறைவன் அருள்பெற அன்புடன் வேண்டிக்கொள்கிறோம். ரூ.10,000 (ரூபாய் பத்தாயிரம்) அதற்கு மேலும் பொருளுதவி செய்பவர்கள் பெயர் கல்வெட்டில் இடம் பெறும்.

இப்படிக்கு
**திருப்பணிக்குழுவினர்கள்**

இறைப்பணிக்காக தாங்கள் அனுப்பும் தொகையை
கீழ்க்கண்ட வங்கிகணக்கு மூலம் அனுப்பியதுடன்
**அலைபேசி எண் 9176986999**
**நா.சுப்பிரமணியன்** அவர்களுக்கு தெரியப்படுத்தவும்

**N.SUBRAMANIAN**
**SB ACCONT NO : 333 9111 0693**
STATE BANK OF INDIA,
PADI BRANCH, IFSC : SBIN0005083
UPI ID : nsm1949g@oksbi

**தொடர்புக்கு... அலைபேசி எண்:**

| | |
|---|---|
| நா.சுப்பிரமணியன் | 91769 86999 |
| சோம.கம்பராசன் | 94438 24393 |
| நா.சுப.மதனீஷ்கண்ணா | 99626 24048 |
| அ.மு.ச.அசோகன் | 73582 65045 |
| கல்லம்பட்டி அம்பலம் | 70946 30833 |
| கல்லம்பட்டி ஊராட்சி தலைவர் | 98436 16659 |
| பிச்சுமணி அய்யர் | 98848 01706 |



பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்தும்
இருள்தீர எண்ணிச் செயல்

- திருவள்ளுவம்

## நல்வாழ்த்துகளுடன்...

**DEEPA ERECTORS PRIVATE LIMITED**
No. 16/5, 1st Main Road, Ramakrishna Nagar,
Ernavoor, Chennai - 600057
mail to : depl@depltd.in

**PHOENIX OILFIELD SERVICES & CONTRACTING LLC**
P.O. BOX: 1151, WADI KABIR P.C. 117,
Sultanate of Oman.

*Specialists in :*

**Construction of Storage Tanks, Pressure Vessels, Pipelines and Blasting & Painting in India & Overseas**



R. Paramasivam B.E.,
***Managing Director***
Ph.: 9884660379



Pa. Mathivanan B.E.,
***Chief Executive Officer***
& A. Nivetha B.E., M.B.A.,
***Business Analyst***



Pa. Shankar B.E., M.S.,
(Sweden)
***Consultant***

# சஷ்டியப்த பூர்த்தி பீமரத சாந்தி விழா

சிங்கம்புணரி (உலகம்பட்டி) **அல. அலங்காரம் செட்டியார் - அல. சந்திரா ஆச்சி** இவர்களின் **சஷ்டி பூர்த்தி பீமரத சாந்தி விழா** 29.03.2024 அன்று மகன் அல. அருண் - தேன்மொழி அருண் மற்றும் மகள் அ. ஜெயந்தி அமர்நாத் - முரு. அமர்நாத் ஆகியோரால் முறைப்படி மிகச் சிறப்பாக பிரான்மலை அ.வ.ந. திருமண மண்டபத்தில் நடைபெற்றது. விழாவில் மாமன், மைத்துனர்கள், சம்பந்திகள், உற்றார் உறவினர்கள், நண்பர்கள் திரளாக கலந்து கொண்டு அபிஷேகம் செய்து ஆசி பெற்று மகிழ்ந்தனர். வாழ்க வளமுடன்!

# உடல் உறுப்பு தானம்

**- ம.சி.கு.கு. குழந்தைவேலன், கோவை**

**செத்தும் கொடுக்க சீதக்காதியால்தான் முடியுமா?**
**நம் ஒவ்வொருவராலும் முடியும்!**



செத்தவருக்குதான் அது செத்த உடல்
மத்தவருக்கோ அது உயிர்தரும்
அதிசயப் பெட்டகம்



கண்மூடிவிட்டவரின் கண்மூடா விழித்திரை...
செத்தும் சாகாமல் துடிக்கின்ற இதயம்...
சீருடன் இயங்கும் கல்லீரல்...

இன்னும் எத்தனையோ...
மருத்துவ அறிவியலின் மகத்துவம்
மரணத்தையே மாற்றி எழுதிவிட்டன



மண்ணில் புதைந்து மக்குவதை...
தீயில் எரிந்து சாம்பலாவதை
சாகப் போராடும் சக மனிதர்களுக்குத் தரலாம்...

கல்லாதவரே எனினும் உயிர் இல்லாதவரும்
உன்னத மனிதராய் திகழலாம்...



# சிலம்பாட்டத்தில் உலக சாதனை நிகழ்த்திய நம்மவர்





பொன்னமராவதி திரு சி.இரா. மில்லர் செட்டியார் -மி. செந்தில் லதா ஆச்சி தம்பதியரின் புதல்வி செல்வி **மி. ஐஸ்வர்யா** 11-02-2024 அன்று காரைக்குடி அழகப்பா மாதிரி மேல்நிலைப் பள்ளியில் நடைபெற்ற சிலம்பம் போட்டியில் பங்கு பெற்று 1 மணிநேரம் இடைவிடாது சிலம்பம் சுற்றி சாதனை நிகழ்த்தியதைப் பாராட்டி, நோபல் உலக சாதனை பிரைவேட் லிமிடெட் நிறுவனம் சான்றிதழ் வழங்கியுள்ளது. **தகவல் : மி.ஐஸ்வர்யா, பொன்னமராவதி**

சிலம்பாட்டத்தில் உலக சாதனை நிகழ்த்திய செல்வி மி. ஐஸ்வர்யா அவர்களை மென்மேலும் பல வெற்றிகளை குவித்திட வாழ்த்துகிறது. **– நிர்வாகிகள், அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம்**

# வாழ்க்கை உன்னதமானது

உயர்ந்த நிலைக்குச் சென்றவர்களின் வெற்றியின் ரகசியமே அவர்கள் ஒருபோதும் தம் பழைய நிலையை மறக்காதது தான். ஏமாந்து போவதைவிட பெரிய வலி நாம் ஏமாந்துட்டு இருக்கோம் என்று தெரியாமல் இருப்பது தான். சந்தர்ப்பத்தை அளித்துவிட்டு அவர்களை சந்தர்ப்பவாதி என்று சொல்லாதீர்கள். அவைகள் உங்களை நீங்களே உணர்ந்து கொள்ள கிடைத்த நல்ல சந்தர்ப்பமாக எடுத்துக் கொள்ளுங்கள்.

ஒருவருக்கு உங்களைப் பிடிக்கவில்லை என்றால் பெரும்பாலும் உங்களிடம் அவருக்கான தேவைகள் முடிந்து விட்டதாகவும் இருக்கலாம். அவர்களைப் பின் தொடராதீர்கள். யாரையும் முக்கியமாக நினைக்காதிருப்பதும், யாருக்கும் முக்கியமில்லாதவர்களாக இருப்பதுமே நிம்மதிக்கு வழிவகுக்கும்.

குடிசையில் இருப்பவரெல்லாம் ஏழையும் அல்ல. மாளிகையில் இருப்பவரெல்லாம் பணக்காரரும் அல்ல. மனத் திருப்தியோடு இருப்பவர்களே உண்மையான பணக்காரர்கள். உங்களிடம் என்ன இருக்கிறதோ அதற்கு நன்றியுடன் இருங்கள். ஏனென்றால் பலர் எதுவுமே இல்லாமல் வாழ்க்கையைக் கழிக்கிறார்கள். எது உங்களைப் பலவீனப்படுத்துகிறதோ அதை தயக்கமின்றி தூக்கி எறிந்து விடுங்கள். வாழ்க்கையில் வேகமாக முன்னேறவில்லை என்று வருத்தப்படாதீர்கள். பின் வாங்காமல் செல்கிறீர்கள் என்பதை நினைத்து சந்தோஷப்படுங்கள். **– அ. அசோகன், TNSTC, மதுரை.**



மதுரை மாநகரில் மீனாட்சி அம்மன் கோவிலில் அருள்மிகு மீனாட்சி சுந்தரேஸ்வரர், மாசி மாதத்தில் சித்திரை வீதியிலும், சித்திரை மாதத்தில் மாசி வீதியிலும் திருவிழா நடைபெறும்.

**- K. சரபேஷ், சிறுகுடி.**

## உடல் ஆரோக்கியம் பெற மூலிகைப்பொடி



**தேவையான பொருட்கள் :**

| | | |
|---|---|---|
| கருஞ்சீரகம் பொடி | - | 50 கிராம் |
| வெந்தயம் பொடி | - | 50 கிராம் |
| ஓமம் பொடி | - | 25 கிராம் |
| மிளகு பொடி | - | 25 கிராம் |
| சீரகம் பொடி | - | 25 கிராம் |
| கிராம்பு பொடி | - | 15 கிராம் |
| ஏலக்காய் பொடி | - | 15 கிராம் |
| நயம் பெருங்காயம் பொடி | - | 15 கிராம் |
| மஞ்சள் தூள் | - | 15 கிராம் |

இவை அனைத்தும் நாட்டு மருந்துக் கடைகளிலும் கிடைக்கும். இந்தப் பொடிகள் அனைத்தையும் கலந்து வைத்துக் கொள்ளவும்.

இந்தக் கலவைப் பொடியை ஒரு ஸ்பூன் அளவு எடுத்து ஒரு டம்ளர் சுக்குக் காப்பியுடன் தினசரி காலையிலும், மாலையிலும் அருந்தி வர உடலில் நச்சுத்தன்மை நீங்கி, அனைத்து அவயங்களும் சீராகி புத்துணர்ச்சி ஏற்படும். நீங்கள் பெற்ற அனுபவத்தை மற்றவர்களுக்கும் பகிர்ந்து கொள்ளலாம்.

வாழ்க வளமுடன்! வாழ்க நலமுடன்!

**- நா. சுப்பிரமணியன், சென்னை - 50 செல் : 91769 86999**



## சித்தர்கள் பௌர்ணமி பூஜை

ஆலவயல் அ.வ.ந. சங்கத்தால் நடத்தப்படும் **147வது சித்தர்கள் பௌர்ணமி பூஜை** 24-03-2024 ஞாயிற்றுக்கிழமை அன்று பகல் சிறப்பாக கொண்டாடப்பட்டது. பொதுமக்களும், நகரத்தார்களும் கலந்து கொண்டனர். நிறைவாக அன்னதானம் வழங்கப்பட்டது.

**தகவல் : பழ. சொக்கலிங்கன், ஆலவயல்**

## பறவை — உள்ளான்



பாப்பா பாடும் பாடலிலே
பாடும் பறவை பார்ப்போமே
கேட்பாய் நீயும் அழகாக
கண்ணால் அதனைக் காண்போமே!
நீரில் நிலமும் சுகமாக
நின்றாய் நாளும் இதமாக
சேரில் வாழும் புழுக்களையும்
சிரமம் இன்றி பிடிப்பதற்கு!
கூரிய நீண்ட அலகினால்
கூர்ந்து கொத்தி உண்பாயே
அழகு வெண்மை மேனியாய்
அழகிய கருப்பு இறகுகளை!
நீண்ட மெல்லிய கால்களும்
நடந்தாய் அழகாய் உள்ளானே!
உள்ளம் மகிழ்ந்து துள்ளிடவே
உள்ளானைப் பார்த்து ரசிப்போமே!

**- I. மித்ரன், R.S.புரம், கோவை**

**அருவியூர் வடக்குவளவு நகரத்தார் பொதுநலச் சங்கம்**

## தலைமைக்கு வாழ்த்துப்பா



(கொச்சகக்கலிப்பா)

தலைவராக 'ஸேதுராமர்' தகவாலே உயர்ந்தவராம்
கலையனைத்தும் 'மணியாரும்' கற்றநல்ல செயலாளர்
மலைபோல கணக்கினையும் மதியாலே வென்றிடுவார்!
தலைமைக்கும் 'சாமிநாதர்' தகவான கணக்கரிவர்!

அருவியூரார் குடும்பங்கள் ஆற்றலாக உயர்ந்திடவே!
வரிசையிலே கோவை வாழும் வல்லவர்கள் மூவரிங்கே!
சரித்திரமும் படைத்திடுவார் சகலவரும் போற்றிடவே!
பெரிதாக வாழ்த்திநாமும் பேரின்பம் கொள்வோமே!

**– கவிஞர் கோவை கு. கணேசன்**



# பெண்மை



சின்ன பூவாய் அம்மா என்ற
மூன்றெழுத்து மூலம் புவியில் தோன்றி
அப்பாவின் செல்ல மகளாய்
அனைவரின் மடியிலும் தவிழ்ந்து
8 ஆம் மாதத்தில் சிற்றாடை அணிந்து
8 அடி நடந்து, பெற்றோரைப் பிரிந்து
8 மணி நேரம் பள்ளியில் பயின்ற அவள்
உற்றார் உறவினர் ஒன்று கூட
மஞ்சள் நீராட்டு விழாவை கொண்டாடி
பட்டாம் பூச்சி போல் பறக்க தயாராகும் அவள்
முற்றுப் பெற்ற பள்ளி படிப்பில் வெற்றி பெற்று
தன் லட்சியத்துக்காக எட்டி பிடித்தாள் கல்லூரி படிப்பு
முதல் பட்டம் ஆசைக்காக
இரண்டாம் பட்டம் லட்சியத்துக்காக
என காலங்கள் ஓடின...
அப்பாவைப் போல தன்னை தாங்கும்
மணவாளனின் கரம் பிடித்து
பெற்றோரை விட்டு அந்த பட்டாம் பூச்சி பறக்கும்போது
வீரமாக மட்டுமே பார்த்த அப்பா கண்கலங்க...
பெண்மையின் நிலையை உணர்ந்த அம்மா
நெகிழ்ந்து நிற்க....
பூவாய் பூத்த அவள்
வேரோடு மாற்றிய மரம் போல,
புதிய உலகத்தில் தன்னை பொருந்தி
வாழத் தொடங்கிய அவள்
தாய்மை என்னும் பட்டத்தை
பெற்றபோது தான் தெரிந்தது
வாழ்க்கை எவ்வளவு அழகானது என்று....
மீண்டும் அந்த சின்ன பூவை பேணிக் காத்து

அவள் பார்க்காத இந்த உலகத்தைக் காட்டி
அம்மா என்ற பாசம் முடிந்து
அம்மா என்ற பாகமும் முடிந்து
பாட்டி என்ற பாச மழையில் நனைந்த அவள்
திரும்பி பார்த்தாள் தன் வழியை
அப்போது தான் புரிந்தது
மூன்றெழுத்து என்னும் பெண்மை
முற்றுப்புள்ளி இல்லாத ஓர் அழகிய தொடக்கம் என்று
அனைத்து பருவத்தில் இருக்கும் பெண்களும்
புத்தாண்டு அன்று பெண்மையை போற்றுவதற்கு
இந்த கவிதை சமர்ப்பணம்.

**- SU. இசைத்தமிழ் M.Sc., (Maths)**

---

## புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட நிர்வாகிகளுக்குப் பாராட்டு

அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகத்தின் பொறுப்பாளர்களாக தேர்ந்து எடுக்கப்பட்ட நிர்வாகிகளுக்கு பாராட்டுக்கள்:

| | | |
|---|---|---|
| தலைவர் | : | திரு **சொ. இராமனாதன்** அவர்கள் |
| செயலாளர் | : | திரு **மு. இராமலிங்கம்** அவர்கள் |
| பொருளாளர் | : | திருமதி **சந்திரகலா இராமநாதன்** |

மேற்குறிப்பிட்ட நிர்வாகிகள் அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகத்தை சிறப்பான முறையில் மேலும் வளர்ச்சிப் பாதையில் எடுத்துச் செல்ல எனது மனமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன். **– பெ. சிவன்ஜோதி, முகுந்தன், தஞ்சாவூர்.**



சிதம்பரம் நடராஜர்
கோவிலிலும்,
பூரி ஜெகநாதர்
கோவிலிலும் மட்டும்
மூலவரே வீதி உலா
வருவார்கள்.



**- K. கோபிகா, சிறுகுடி**

## கல்விக் காவலர்கள்

1. **மே 2004 : முதல் கல்விக் காவலர், ஆமலூருடையார், தெய்வத்திரு. வெ.ராம. சுப்பிரமணியன் செட்டியார் – அன்னபூரணி ஆச்சி அவர்கள், அம்மன் குறிச்சி, சென்னை.**
2. ஜூலை 2004 : மேலூருடையார், **திரு. தே.மா. பழனிச்சாமி செட்டியார் – திருமதி. சரஸ்வதி ஆச்சி** அவர்கள், பொன்னமராவதி.
3. செப்டம்பர் 2006 : கழனிவாசலூருடையார் **திரு.நா. சுப்பிரமணியன்** BSc., CAIIB **திருமதி. தமிழ்ச்செல்வி** B.Lit., அவர்கள், கல்லம்பட்டி, சென்னை.
4. **மார்ச் 2007 : நாவலூருடையார், திரு. ச. கனகசபை B.E., மனோரஞ்சிதம்** அவர்கள், உலகம்பட்டி, திருச்சி.
5. ஜூலை 2007 : கழுகக்கூருடையார், **தெய்வத்திரு. இராம. வேலாயுதம் செட்டியார் – பார்வதி ஆச்சி** அவர்கள், படமிஞ்சி, சென்னை.
6. நவம்பர் 2007 : கழனிவாசலூருடையார், **தெய்வத்திரு. மு.சி.கி. நாராயணன் செட்டியார் – இராஜமாணிக்கம் ஆச்சி** அவர்கள்,கல்லம்பட்டி.
7. மே 2010 : சிக்கலூருடையார், **தெய்வத்திரு. நல்லாசிரியர் மெ. இளங்கோ – சாவித்திரி** அவர்கள். வா.புதூர்.
8. ஜூலை 2011 : அரும்பாக்கிளையார். திரு. **M.M. தியாகராஜன் B.Sc., தெய்வத் திருமதி. ஜோதிமணி** அவர்கள் புழுதிப்பட்டி. மதுரை.
9. ஜனவரி 2012 : பொன்னமராவதி பூண்டிலூருடையார். தெய்வத்திரு. மா. தங்கராஜன் – அழகுமீனாள் அவர்கள், புழுதிபட்டி பெங்களூரு.
10. மார்ச் 2012 : கழுகக்கூருடையார். **தெய்வத்திரு. மு.ஆ. இராமசாமி செட்டியார். தெய்வத்திருமதி. இராஜாமணி ஆச்சி,** சொக்கம்பட்டி.
11. மே 2012 : நாவலூருடையார், **திரு. ச. சொக்கலிங்கம் செட்டியார் – தெய்வத்திருமதி. தனபாக்கியம் ஆச்சி** அவர்கள் உலகம்பட்டி.
12. **ஜூலை 2012 : கழனிவாசலூருடையார். திரு. P.L. இராமஜெயம், பத்மாவதி அவர்கள், பொன்னமராவதி.**
13. செப்படம்பர் 2012 : கழுகக்கூருடையார். **தெய்வத்திரு.** M.S.M. **மாணிக்கம் செட்டியார் – சரஸ்வதி ஆச்சி** அவர்கள், பொன்னமராவதி.
14. **நவம்பர் 2012 : பணப்பாக்குழூருடையார். தெய்வத்திரு. கு. சொக்கலிங்கம் செட்டியார் – சொ. தேனம்மாள் ஆச்சி, செம்பூதி.**
15. மார்ச் 2013 – அரும்பாக்கிளையார், **தெய்வத்திரு. இராம. கதிரேசன் செட்டியார். திருமதி.முத்துலெட்சுமி ஆச்சி,** புழுதிப்பட்டி.
16. **மே 2013 : மேலூருடையார். தெய்வத்திரு. தே.மா. நாராயணன் செட்டியார் – சண்முகவள்ளி ஆச்சி,** பொன்னமராவதி.
17. ஜூலை 2013 : பூதமங்கலமூருடையார். **திரு. ச. இராமலிங்கம் – இராஜமாணிக்கம்,** அயனாவரம். சென்னை.
18. நவம்பர் 2013 : ஆமலூருடையார். **திரு. வெ.இராம.சுப. துரைராசு செட்டியார் – மீனாட்சி ஆச்சி,** அம்மன்குறிச்சி, சென்னை

19. ஜனவரி 2014 : நாவலூருடையார். **தெய்வத்திரு. அரு. வேலாயுதம் செட்டியார் – சம்பூர்ணம் ஆச்சி,** பொய்யாமணிப்பட்டி.

**20. மார்ச் 2014 : பூதமங்கலமூருடையார். திரு. R. பரமசிவம் B.E., தெய்வத்திருமதி. சிவகாம சுந்தரி, பொன்னமராவதி, சென்னை.**

**21. ஜனவரி 2015 : பூதமங்கலமுருடையார். திரு. அ.சொ. சண்முகம் செட்டியார் – ஜெயபாரதி ஆச்சி, அம்மன்குறிச்சி, திருச்சி.**

**22. மார்ச் 2015 : அரும்பாக்கிளையார். திரு. A.P. ஜெயபால் – புவனேஸ்வரி, பொன்னமராவதி, ஈராடு.**

23. ஏப்ரல் 2015 : கழுகக்கூருடையார், **தெய்வத்திரு. ம.வெ. நாராயணன் செட்டியார் – மீனாட்சி ஆச்சி** உலகம்பட்டி.

24. ஏப்ரல் 2015 : நாவலூருடையார். **திரு. சித. நடராஜன் செட்டியார், தெய்வத்திருமதி. இராஜம்மாள் ஆச்சி,** பொய்யாமணிப்பட்டி.

25. மே 2015 : நாவலூருடையார். **திரு. அரு.வே. மாணிக்கவேலு – சரஸ்வதி,** பொன்னமராவதி.

**26. ஜூலை 2015 : ஆமலூருடையார். திரு. வெ.இராம.சுப. செல்வம்** B.Sc., ACA., **– ஆனந்தம் ஆச்சி, அம்மன்குறிச்சி, சென்னை.**

27. ஜனவரி 2016 : அரும்பாக்கிளையார், தெய்வத்திரு. **மங்கைபாகன் செட்டியார் – சிகப்பி ஆச்சி,** புழுதிப்பட்டி.

28. மே 2016 : கழுகக்கூருடையார், **திரு. சி.சொ.மு. இராமையா செட்டியார் – தெய்வத்திருமதி. ஜெகநாதம் ஆச்சி,** கொன்னைப்பட்டி, தேனி.

29. செப்டம்பர் 2017 : ஆமலூருடையார். **திரு. வெ.இராம.சுப. நேசமணி செட்டியார் – அருள்நிதி புவனேஸ்வரி ஆச்சி,** அம்மன்குறிச்சி, சென்னை.

30. ஜனவரி 2018 : பணப்பாக்கூருடையார் **தெய்வத்திரு. சுப. மணிவாசகம் செட்டியார் – தேன்மொழி ஆச்சி,** காரைக்குடி.

31. செப்டம்பர் 2018 : கழுகக்கூருடையார் **திரு. சோம. கதிரேசன் செட்டியார் – தவமணி ஆச்சி,** பொன்னமராவதி, தொட்டாம்பாளையம்.

32. ஜூலை 2019 : அரும்பாக்கிளையார் **திரு. பொன். சிவஞானம் செட்டியார் – ராஜகுமாரி ஆச்சி,** சிறுகுடி.

**33. ஆகஸ்ட் 2019 : நாவலூருடையார் தெய்வத்திரு. சித. மாணிக்கம் செட்டியார் – அழகுமீனாள் ஆச்சி, பொய்யாமணிப்பட்டி.**

**34. ஆகஸ்ட் 2019 : வரதலூருடையார் ந. செல்வம் செட்டியார் – சிவயோகம் ஆச்சி, புழுதிபட்டி / கோவை.**

**35. ஜனவரி 2020 : பழனி ஆதிசைவ அன்னதான மடம் – அருள்மிகு பழனி ஆண்டவர் அறக்கட்டளை, பழனி.**

36. மார்ச் 2020 : மேலுருடையார் **தெய்வத்திரு. செ.பெ.அ. அலங்காரம் செட்டியார் – திருமதி. செம்பாயி ஆச்சி,** சிறுகுடி.

**37. அக்டோபர் 2020 :** பொன்னமராவதி **பூண்டிலூருடையார்**
**திரு. சி. வெள்ளைச்சாமி செட்டியார் - திருமதி. சாந்தி ஆச்சி, சிறுகுடி / கோவை.**

**38. டிசம்பர் 2020 : கழனிவாசலூருடையார் கிருங்காக்கோட்டை**
**திரு.** V. **லட்சுமணன் செட்டியார் - பாக்கியலட்சுமி ஆச்சி தம்பதியர்**

**39.** மே **2021 :** மேலூருடையார் **செம்பூதி/பொன்னமராவதி** தெய்வத்திருவாளர்கள்
**தே.மா. சுப்பையா செட்டியார்- சுப. பூங்கோதை ஆச்சி**

40. **டிசம்பர் 2021 : பாளையூர் அம்பலம்கொண்டார் ஒடுவன்பட்டி/தஞ்சை திரு S. மாணிக்கம் செட்டியார் – திருமதி சுசீலா ஆச்சி**
41. **பிப்ரவரி 2022 : கழுகக்கூருடையார் கிருங்காக்கோட்டை/கோவை தெய்வத் திருவாளர்கள் தேனப்பன் செட்டியார் – சந்திரா ஆச்சி**
42. **ஆகஸ்ட் 2022 : அரும்பாக்கிளையார் – சிறுகுடி தெய்வத்திரு. ம.பொ. மாணிக்கம் செட்டியார் – தெய்வத்திருமதி. ம.பொ.மா. வேலுமயிலி ஆச்சி.**
43. ஜனவரி 2023 : உளுந்தூருடையார் **தெய்வத்திருவாளர் அரு. கிருஷ்ணன் செட்டியார் – நலமுடன் திருமதி சாவித்திரி ஆச்சி,** அ. காளாப்பூர்.
44. மே 2023 ஆமலூருடையார் **தெய்வத்திருவாளர்கள் சி. அண்ணாமலை செட்டியார் – பரஞ்சோதி ஆச்சி,** அம்மன்குறிச்சி.
45. மே 2023 நாவலூருடையார், **தெய்வத்திருவாளர்கள் வே. சண்முகநாதன் செட்டியார் – குஞ்சரத்தம்மை ஆச்சி,** உலகம்பட்டி.
46. ஜுலை 2023 கழனிவாசலூருடையார் குளத்துப்பட்டி தெய்வத் திருவாளர்கள் **அரு. அறிவுச்செல்வன் செட்டியார் – பாக்கியம் ஆச்சி & மூத்த மகள் சுப. பரிமளம் ஆச்சி.**
47. நவம்பர் 2023 மேலூருடையார் **அ.கு. நடராஜன் – தெய்வத்திருமதி ந. மீனாம்பாள் ஆச்சி,** சொக்கம்பட்டி.
48. நவம்பர் 2023 மேலூருடையார் **தெய்வத்திரு க.அ. அலங்காரம் செட்டியார்** சிறுகுடி.
49. ஜனவரி 2024 மேலூருடையார் **Rm.A. கண்ணன் செட்டியார் – க. அன்பு பிரியாள் ஆச்சி,** சிறுகுடி/கோவை
50. செப்டம்பர் 2023 – கல்வாசநாட்டு சுந்தர பாண்டியபுரத்து நன்னெறி பூண்டிலூருடையார் (சொக்கம்பட்டி) சென்னை திரு **A.S. முருகேசன் செட்டியார் – மு. கலைச்செல்வி ஆச்சி.**
51. வரதலூருடையார் **R. ராமச்சந்திரன் செட்டியார் – ரா. மணிமேகலை ஆச்சி,** கிருங்காக்கோட்டை / கோவை
52. மேலூருடையார் தெய்வத்திருவாளர்கள் **செ. செம்பன் செட்டியார் – பொன்னம்மாள் ஆச்சி,** சிறுகுடி.

**அச்சிட்டோர் : சூர்யா பிரிண்ட் சொலூசன்ஸ்**

534 -ஏ, காமராஜர் சாலை, சிவகாசி - 626123.

போன்:04562-223315 இ.மெயில் suryaprint1998@gmail.com

**உலகின் பிரபலமான ஆடை வடிவமைப்பாளரும் எழுத்தாளருமான கிறிஸ்டா ரோட்ரிக்ஸ் புற்றுநோயால் இறப்பதற்கு முன் இந்தக் கட்டுரையை எழுதினார்.**



எனது கேரேஜில் உலகின் மிக விலையுயர்ந்த கார் பிராண்ட் இருந்தது. ஆனால் இப்போது நான் சக்கர நாற்காலியில் பயணிக்கிறேன்.

எனது வீடு அனைத்து வகையான வடிவமைப்பாளர்களின் ஆடைகள், காலணிகள் மற்றும் மதிப்புமிக்க பொருட்களால் நிறைந்துள்ளது. ஆனால் எனது உடல் மருத்துவமனை வழங்கிய சிறிய துணியால் சுற்றப்பட்டுள்ளது.

வங்கியில் போதுமான பணம் உள்ளது. ஆனால் இப்போது அந்தப் பணத்தால் எனக்குப் பலன் இல்லை. என் வீடு ஒரு அரண்மனை போன்றது. ஆனால் நான் ஒரு மருத்துவமனையில் இரட்டை அளவு படுக்கையில் படுத்திருக்கிறேன்.

நான் ஐந்து நட்சத்திர ஹோட்டலில் இருந்து மற்றொரு ஐந்து நட்சத்திர ஹோட்டலுக்குச் செல்ல முடியும். ஆனால் இப்போது நான் மருத்துவமனையில் ஆய்வகத்திலிருந்து மற்ற ஆய்வகத்திற்கு நகர்ந்து நேரத்தை செலவிடுகிறேன்.

நான் நூற்றுக்கணக்கான நபர்களிடம் கையெழுத்திட்டேன். இன்று மருத்துவரின் குறிப்பு என் கையெழுத்து.

என் தலைமுடியை அலங்கரிக்க ஏழு நகைகள் வைத்திருந்தேன். இப்போது என் தலையில் முடி இல்லை.

ஒரு தனியார் ஜெட் மூலம் நான் எங்கு வேண்டுமானாலும் பறக்க முடியும். ஆனால் இப்போது எனக்கு மருத்துவமனை உள் முற்றம் செல்ல இரண்டுபேரின் உதவி தேவை.

பல உணவுகள் இருந்தாலும், என் உணவில் ஒரு நாளைக்கு இரண்டு மாத்திரைகள் மற்றும் இரவில் சில துளிகள் உப்பு.

இந்த வீடு, இந்தக் கார், இந்த ஜெட் இந்த மரச்சாமான்கள் பல வங்கிக் கணக்குகள், இவ்வளவு நற்பெயர் மற்றும் புகழ் இவை எதுவும் பயனற்றவை.

விலைமதிப்பற்ற பொருட்கள் எதுவும் எனக்கு நிவாரணம் தரவில்லை.

**– அ. அசோகன் TNSTC, மதுரை**

# நம்மவர்களின் அறப்பணி



நம் சமூகத்தினர் சீரோடும், சிறப்போடும் வாழ்ந்து வரும் ஊர்களில் ஒன்று சிறுகுடி. அங்கு வருடந்தோறும் பங்குனி மாதம் 2-வது செவ்வாய்க்கிழமை சாத்திரை என்ற முத்தாளம்மன் திருவிழா மிகவும் சிறப்பாக நடைபெற்று வருகிறது. முதல் செவ்வாய் காப்புக் கட்டி புதிதாக மண் எடுத்து அம்மனை உருவாக்கி அடுத்த செவ்வாய் இரவு கண்திறத்தல் மூலம் அம்மன் சிலைக்கு முழு உருவம் கொடுத்து மந்தையில் உள்ள கோவிலில் எழுந்தருள வைக்கிறார்கள். அன்று இரவு முழுவதும் ஆட்டம், பாட்டம், கொண்டாட்டமாக இருக்கும். அனைவரின் வீடுகளிலும் உறவினர் கூட்டம் அலைமோதும். விருந்து உபசாரம் பலமாக இருக்கும். கோவிலிலும் விடிய- விடிய குழந்தைக்கு தொட்டில் கட்டுதல், ஆரத்தி எடுத்தல், மாவிளக்கு வைத்தல் என்று ஒவ்வொரு சமூகத்தினரும் வரிசையாக வந்து அம்மனை சிறப்பாக வழிபாடு செய்கிறார்கள். மறுநாள் புதன்கிழமை மாலை அனைவரும் கூடி அம்மனை வழிபட்டு, அம்மனுக்கும் பிரியாவிடை கொடுத்து பூஞ்சோலைக்கு அனுப்பி வைக்கிறார்கள். திரும்ப அடுத்த வருடம் இதே போன்று புதிதாகச் செய்து வழிபடுகிறார்கள்.

சிறுகுடிக்கும், மஞ்சநாயக்கன்பட்டிக்கும் இடையில் ஒரு குளம் உள்ளது. அதற்கு ஒருசந்திக்குளம் என்று பெயர். விரதம் இருப்பவர்கள் இக்குளத்தில் குளித்துவிட்டு வந்து சாமி கும்பிட்ட பின் விரதத்தை முடித்துக்கொண்டு உணவு உண்பார்கள். மேலும் மலையலங்கார சுவாமி கோவில் புரவி எடுப்பு திருவிழா காலத்தில் அரண்மனைபுரவி உள்பட அனைத்து புரவிகளையும் காவல்காத்து வரும் முன்னோடித் தெய்வமான நொண்டிக் கருப்ப சுவாமியை கொண்டாடி வரும் நந்தன குலத்தவர்கள் ஒரே ஓர்மையுடன் காலையிலிருந்து மாலை வரை அதாவது பொழுது சாயும்வரை எச்சிலைக்கூட விழுங்காமல் விரதத்தை கடைபிடிப்பதாகவும், அவர்கள் குளித்துவிட்டு விரதத்தை முடித்துக் கொள்வதற்காக

வெட்டப்பட்ட குளம் என்பதால் தான் அதற்கு ஒருசந்திக்குளம் என்கிற பெயர் ஏற்பட்டதாகச் சொல்லப்படுகிறது. இரு வேளைகளில் காலை, மதியம் சாப்பிடாமல் ஒரு வேளை மட்டும் உணவு உண்பதைத் தான் **ஒருசந்தி** என்போம்.

இந்த சிறப்புமிகு குளத்தை வெட்டியவர்கள் நம் சமூகத்தைச் சேர்ந்த சிறுகுடியில் வாழ்ந்த மேலூருடையார் குடிப்பட்டத்தைச் சேர்ந்த **மச்சக்காளை செட்டியார்** என்பவர் ஆவார். இவரது மகன் அலங்காரம் செட்டியார். இந்த அலங்காரம் செட்டியாரின் மூத்தமகள் ஜோதிமணி ஆச்சி மூலமாக இந்த விவரம் எனக்குத் தெரிய வந்தது. இவர்கள் இப்போது சிறுகுடியில் வசித்து வருகிறார்கள்.

இந்தக் குளத்தை வெட்டிய திரு மச்சக்காளை செட்டியார் தம் முதல் மனைவி வேலுமயிலி ஆச்சியின் நினைவாக இந்த அறப்பணியை செய்துள்ளார்கள். வேலுமயிலி ஆச்சி என்பவர் சிறுகுடியைச் சேர்ந்த பழநிச்சாமி செட்டியார், சோமசுந்தரம் செட்டியார் இவர்களின் அத்தையும் வேலு செட்டியார் அவர்களின் தங்கையும் ஆவார். இந்த வேலுமயிலி ஆச்சி அவர்கள் பிரசவத்தின்போது இயற்கை எய்துவிட அவர் நினைவாக இந்தக் குளத்தை வெட்டியிருக்கிறார். ஒரு சுமைதாங்கிக் கல்லும் வைத்து, அரச மரமும் நட்டு வைத்திருக்கிறார்கள். இது சம்பந்தமான ஒரு கல்வெட்டும் இந்தக் குளக்கரையில் இருக்கிறது.

இது தவிர சிறுகுடியில் கிழக்குத் தெருவில் குருசாமி கோவில் ஒன்று உள்ளது. இது திருமலை நாயக்கர் மன்னர் காலத்தில் அவரின் ஆளுகைக்கு உட்பட்ட நத்தம் ஜமீன்தார் லிங்கமநாயக்கர் அவர்களால் கட்டப்பட்டதாகக் கூறப்படுகிறது. இந்தக் கோவிலில் உள்ள விநாயகர் சந்நிதியையும் மேற்சொன்ன மச்சக்காளை செட்டியார் அவர்களே கட்டியதாகக் கூறப்படுகிறது. இந்தப் பிள்ளையார் கோவிலின் நுழைவாயிலில் உள்ள இரண்டு தூண்களில் தென்புறம் உள்ள தூணில் வடக்குப் பார்த்து வணங்கியபடி நின்று கொண்டிருப்பதுதான் வேலுமயிலி ஆச்சி சிலையாகும்.

இந்த அறப்பணிகளைத் தொடர்ந்து இப்போது திரு அலங்காரம் செட்டியார் – சிவனம்மாள் ஆச்சியின் மகள்களாகிய திருமதி ஜோதிமணி ஆச்சியும் (சிறுகுடி), திருமதி முத்துலெட்சுமி ஆச்சியும் (புழுதிபட்டி) தங்களுக்குத் தங்களின் பெற்றோரால் கொடுக்கப்பட்ட மனையிடத்தை சிறுகுடியில் பாப்பாத்தி அம்மன் கோவில் வீடு கட்டுவதற்கு இனாமாகக் கொடுத்து புண்ணியம்

சேர்த்துக் கொண்டுள்ளார்கள். இந்த வருடம் சாத்திரைக்குச் சென்ற போது இந்த விவரங்கள் எனக்குத் தெரியவந்தது.

மேற்குத் தொடர்ச்சியில் சிறுமலை என்கிற மலையின் தொடர்ச்சியாக **கரந்தமலை** என்கிற பரந்து விரிந்த வனப்பகுதி உள்ளது. இம்மலையில் வனதேவதைகள் பல காவல் தெய்வங்களாக உள்ளன. வழிபாட்டிற்கு உகந்ததாகவும், தீர்த்தமாட உகந்தமாகவும், புனித தீர்த்தமாகவும் போற்றிக் கொண்டாடப்படும் அருவிகள் பல இம்மலையில் உள்ளன.

இம்மலையின் உச்சியில் **மலையூர்** என்கிற இயற்கை எழில் கொஞ்சும் ஊர் உள்ளது. இவ்வூரில் மக்களையும், வனத்தையும் காக்கும் கருப்பசாமியும், பேனாச்சி அம்மன் என்கிற இரு தெய்வங்கள் இவ்வூரையும், அங்குள்ள மக்களையும், வனத்தையும் காத்து வருகின்றார்கள். மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறை பேனாச்சி அம்மன் திருவிழா நடைபெறும். இந்த அம்மனுக்கு சிலையைச் செய்ய இக்குளத்தில்தான் பிடிமண் எடுக்கப்பட்டு இங்கேயே சிலை செய்து மலையூருக்கு கொண்டு செல்லப்படுவது வழக்கமாகும்.

**– முனைவர் திருமதி சூரியகலா குமார், புதுக்கோட்டை**

# கராத்தே பயிற்சியில் மஞ்சள் பெல்ட்





ஆலவயல் அ.வ.ந. சங்க துணைத் தலைவர் திரு பழ. சொக்கலிங்கன் செட்டியார் – தமிழ்மணி ஆச்சி இவர்களின் பேத்தியும் கோயம்புத்தூர் திரு சொ. சத்யஜவகர் – ரதி இவர்களின் மகளுமான செல்வி **அமிர்தா என்ற சாரா** கோவை கார்மல் கார்டன் பள்ளியில் நடந்த கராத்தே வகுப்பில் நடந்த விழாவில் **மஞ்சள் பெல்ட்** அணிவித்து பாராட்டப்பட்டார்.

**தகவல் : திரு பழ. சொக்கலிங்கன், ஆலவயல்.**

செல்வி அமிர்தாவை வாழ்த்துவதில் கல்வி வளர்ச்சிக் கழகம் பெருமிதம் கொள்கிறது.

**– நிர்வாகிகள், அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம்**

# 2023-24ஆம் ஆண்டில் பெருந்தொகை வழங்கிய நன்கொடையாளர்கள்

**மாபெருங்கொடை வள்ளல்கள் :**

1. திரு. **A.P. ஸேதுராமன் - விஜயலட்சுமி,** கோவை.
2. திரு. செல்வன் **R.M. செந்தில்,** பொன்.புதுப்பட்டி.
3. திரு. **சொ. இராமநாதன் - சிவசக்தி,** (செம்பதி) துபாய்.

**பெருங்கொடை வள்ளல்கள் :**

1. திரு. **சொ. வைத்திலிங்கம் செட்டியார் - பாப்பா ஆச்சி,** மதுரை.
2. தெய்வத்திரு. **STKR. சக்திவேல்** நினைவாக **S. ராஜலெட்சுமி,** பொன்னமராவதி.

**கொடை வள்ளல்கள் :**

1. திருமதி. **இராம. லதா** அவர்கள், நத்தம்
2. திரு. **து. அரவிந்த் குமார் B.E., M.S., – பத்மா, B.E.,** சென்னை.
3. **திரு. ம.சி.கு.கு. கணேசன் செட்டியார் - தென்னரசி ஆச்சி,** கோவை.

**வள்ளல்கள் :**

1. திரு. **M. பாலகிருஷ்ணன் - பானுமதி ஆச்சி,** சிங்கம்புணரி.
2. திரு. **செ. ஆசை அலங்காரம்** குடும்பத்தார், சிறுகுடி.
3. திரு. **M.S. முருகப்பன்,** பொன்னமராவதி.
4. திரு. **சொ. முருகேசன் - கவிதா,** சிவகாசி.
5. திரு. **A. முருகன் - செல்வமணி,** நீடாமங்கலம்.
6. திரு. **T.M.R.S. சிவக்குமார் - அருணோதயம்,** கோவை.

**6-12 மாணவர்களுக்கு உதவித்தொகை வழங்கும் நன்கொடையாளர்கள்**

1. சிங்கம்புணரி **மீனாட்சி நல்லதம்பி,** வலச்சேரிப்பட்டி **தெய்வானை வள்ளியப்பன்** நினைவாக **அவந பொதுநலச் சங்கம்,** பிரான்மலை.
2. தெய்வத்திரு. **மு.அ. பரமசிவம் செட்டியார் - அங்கம்மாள் ஆச்சி** குடும்பத்தார், பொன்.புதுப்பட்டி.
3. திரு. **சொ. வைத்திலிங்கம் செட்டியார்-பாப்பா ஆச்சி** குடும்பத்தார், மதுரை
4. திரு. **தே.மா. பழனிச்சாமி செட்டியார் - பழ. சரஸ்வதி ஆச்சி** குடும்பத்தார், பொன்.புதுப்பட்டி.
5. தெய்வத்திரு. **தீ.பழ. பொன்னுச்சாமி செட்டியார் - அன்னமயிலி ஆச்சி,** நினைவாக **A.P. ஸேதுராமன் - விஜயலட்சுமி,** கோவை.

**தங்கப்பதக்கம் வழங்கும் நன்கொடையாளர்கள்**

1. திரு. **அரு.சோம. சண்முகநாதன் - சிவகாமி,** தூத்துக்குடி.
2. **அருவியூர் வடக்குவளவு நகரத்தார் சங்கம்,** பொன்னமராவதி
3. **அருவியூர் வடக்குவளவு நகரத்தார், கல்வி வளர்ச்சிக் கழகம்,** பிரான்மலை.
4. **அருவியூர் வடக்குவளவு நகரத்தார் சங்கம்,** கோயம்புத்தூர்.

# ஒன்பதாம் ஆண்டு நினைவஞ்சலி

## எங்களை வாழவைக்கும் தெய்வம்

தோற்றம்
23-09-1934

மறைவு
08-05-2015



தெய்வத்திருமதி

## மு. தேனம்மாள் ஆச்சி

V. புதூர்

(க/பெ. மு. மயி. முத்துச்சாமி செட்டியார் என்ற சேது செட்டியார்)

இம்மண்ணுலகை விட்டு மறைந்தாலும் உங்கள் ஆசியுடன் நினைவில் வாழும்

கணவர்: திரு மு. மயி. முத்துச்சாமி செட்டியார் மற்றும்
மகன்கள், மகள்கள், பேரன், பேத்திகள், V. புதூர்

எங்கள் இதய தெய்வத்தின்

# ஆறாம் ஆண்டு நினைவஞ்சலி

06.5.2024



தெய்வத்திரு.

## அ.ப. அங்கம்மாள் ஆச்சி

*நீங்காத நினைவுகளுடன்*

1936

**ஆதிகாலத்து**
**அலங்கார மாளிகை**

பொன்னமராவதி | புதுக்கோட்டை

1936

**ஆனந்த்**
**பைப்ஸ்**

ஈரோடு | திருச்சி | மதுரை

## குடும்பத்தார்கள்



# தமிழ் மொழி

**– கவி.கொ. கணேசன், கோவை**



காற்றும் மொழிந்த
முதலாம் மொழியே!
வளியில் வழிந்த
வண்டமிழ் மொழியே!

ஓலையில் பிறந்து
சாலையில் கடந்து
காகிதத்தில் நுழைந்து
கணினியில் புகுந்து

அகத்தியர் கண்ட
அருந்தமிழ் மொழியே!
அகத்தில் நிறைந்த
ஆருயிர் மொழியே!

சங்கம் வைத்த
காலம் தொட்டு!
அங்கம் தாண்டி
அகத்தைத் தொட்டு!



எந்தை மொழிந்த
சிந்தையில் கலந்த
சந்தையில் சிறந்த
விந்தை மொழியே!

எட்டு வைத்து
ஏகமாய் செல்லும்!
கட்டுக் குலையா
கட்டழகு மொழியே!

மெல்லினம் மேவிய
வல்லினம் தூவிய
இடையினம் தாவிய
கொடையின மொழியே!

கடலுள் ஒலித்த
கடவுள் படித்த
பக்தி மொழியே!
முக்தியின் வழியே!

★★★

மங்கையராகப் பிறப்பதற்கு நல்ல
மாதவம் செய்திட வேண்டுமம்மா **– மகா கவி பாரதியார்.**

மங்கைக்கு பாகத்தை அளித்த மங்கைபாகரை
நாம் தொழுது வணங்கிட மாதவம் செய்திட வேண்டுமம்மா

**–A. கார்த்திகா B.Sc., சிறுகுடி.**

# சிவபெருமானால் அபிஷேகிக்கப்பட்ட குருவாயூரப்பன்





கேரள மாநிலம் திருச்சூர் மாவட்டத்தில் இருக்கிறது குருவாயூர். இங்குள்ள கிருஷ்ணர் கோவில் மிகவும் பிரசித்திப் பெற்றது. குழந்தை தோற்றத்தில் இருக்கும் இத்தல மூலவர், உன்னிகிருஷ்ணன், குழந்தைக் கண்ணன், பாலகிருஷ்ணன் என்ற பல பெயர்களால் அழைக்கப்பட்டாலும் உலகம் முழுவதும் உள்ள மக்கள் இவரை அழைக்கும் புகழ் பெற்ற பெயராக, குருவாயூரப்பன் என்ற பெயர் இருக்கிறது. 108 திவ்ய தேசங்களின் பட்டியலில் இல்லாவிட்டாலும். குருவாயூரப்பன் கோவில் உலகம் முழுவதும் மிகவும் புகழ் பெற்ற ஆலயங்களில் ஒன்றாகும்.

கிருஷ்ண அவதாரத்தை எடுப்பதற்கு முன்பாக, தன்னுடைய தாய் தந்தையான வசுதேவருக்கும், தேவகிக்கும் குழந்தை வடிவத்தில் காட்சி கொடுத்தார் மகாவிஷ்ணு. அந்தக் குழந்தை வடிவில் குருவாயூர் தலத்தில் வீற்றிருப்பதால், இந்தத் திருத்தலம் தென்னகத்தின் துவாரகா என்ற பெயராலும் அழைக்கப்படுகிறது. குரு பகவானும், வாயு பகவானும் சேர்ந்து ஏற்படுத்திய திருத்தலம் என்பதால் இது குருவாயூர் என்று பெயர் பெற்றது. இந்த ஆலயத்தில் நின்ற கோலத்தில் குழந்தை வடிவில் கிருஷ்ணர் காட்சி தருகிறார்.

**தல வரலாறு :**

கிருஷ்ண அவதாரம் நிறைவடைந்தது. இதனால் வைகுண்டம் செல்ல ஆயத்தமானார் கிருஷ்ணர். அப்போது அவருடன் கடைசி வரை இருந்தவர் உத்தவர், கிருஷ்ணா.. நீ இல்லாமல் இந்த உலகத்தில் நான் எப்படி வாழ்வது? என்று கேட்டார். தன் குழந்தைப் பருவ சிலை ஒன்றை தோற்றுவித்த கிருஷ்ணர் உத்தவா கவலையை விடு. நான் இல்லாத குறையை

இந்த விக்கிரகம் தீர்த்து வைக்கும். எனது அவதார முடிவில் ஏழு நாட்களுக்குள் துவாரகை கடலில் மூழ்கிவிடும். அப்போது இந்த விக்கிரகம் கடலில் மிதந்து உன்னிடம் வந்து சேரும். அதனை தேவ குருவான பிரகஸ்பதியிடம் ஒப்படைத்து அவர் விரும்பும் இடத்தில் பிரதிஷ்டை செய்யச் சொல் என்று கூறி, தன் அவதாரத்தை களைந்து வைகுண்டம் சென்றார்.

அதன்பின் வந்த நாட்களில் கிருஷ்ணர் சொன்னது போலவே நடந்தது. பெரும் பிரளயம் உண்டாகி, துவாரகை நகரம் கடலுக்குள் சென்றது. பிரளயம் ஓய்ந்ததும் கடலில் மிதந்து வந்த சிலை உத்தவரிடம் வந்து சேர்ந்தது. அதனை குருபகவானிடம் உத்தவர் ஒப்படைத்தார். அந்த சிலையை எடுத்துக் கொண்டு, குருவும், வாயுவும் நல்லதொரு இடம் தேடி அலைந்தனர். அப்படி அவர்கள் வந்த இடம் கேரளா. அங்கே பரசுராமரின் ஆசிரமத்திற்கு வந்த குருவும், வாயுவும் தங்களிடம் உள்ள கிருஷ்ணரின் சிலையை பிரதிஷ்டை செய்ய ஓர் இடம் வேண்டினர்.

பின்னர் அவர்கள் மூவரும் ருத்ரதீர்த்தத்தின் அருகே உமையுடன் சிவபெருமான் வீற்றிருந்த இடத்திற்குச் சென்று ஈசனை வணங்கி நின்றனர். அவர்களின் முன் தோன்றிய சிவபெருமான் இந்த ஆலயத்தின் அருகிலேயே விஸ்வகர்மா உதவியுடன் ஒரு கோவில் எழுப்பி இந்த விக்கிரகத்தை பிரதிஷ்டை செய்யுங்கள். அனைவருக்கும் நலம் உண்டாகும் என்று ஆசி கூறினார். அதன்படி விஸ்வகர்மாவால் அங்கு கோவில் எழுப்பப்பட்டது. குருவும், வாயுவும் சேர்ந்து கிருஷ்ணரின் விக்கிரகத்தை பிரதிஷ்டை செய்தனர். **கிருஷ்ணரின் விக்கிரகத்திற்கு சிவபெருமானே அபிஷேகம் செய்தார்.**

குருவாயூரப்பன் கோவில் கருவறைக்கு வடகிழக்கில் வருண பகவானால் ஏற்படுத்தப்பட்ட கிணறு ஒன்று உள்ளது. இந்தக் கிணற்றில் உள்ள நீர்தான் இவ்வாலய இறைவனுக்கு அபிஷேகம் செய்யப் பயன்படுத்தப்படுகிறது.

இந்த ஆலயத்தில் ஆதிசங்கரரால் வரையறுக்கப்பட்ட பூஜை முறைகளும், தாந்தரிக வடிவில் சென்னாஸ் நாராயணன்

நம்பூதிரியால் எழுதப்பட்ட வழிமுறைகளும் பின்பற்றப்பட்டு கோவில் இறைவழிபாடுகள் நடத்தப்படுகின்றன. இத்தலத்தில் உள்ள குருவாயூரப்பன் சிலையானது, கல்லிலோ, வேறு உலோகத்தாலே செய்யப்பட்டதல்ல. பாதாள அஞ்சனம் என்றும் மையால் இந்த விக்கிரகம் வடிக்கப்பட்டிருக்கிறது.

ஆலயத்திற்குள் நுழைந்ததும் தங்கத் தகடுகள் வேயப்பட்ட 33.5 மீட்டர் உயரமுள்ள கொடிக் கம்பத்தின் இருபுறமும் 13 அடுக்குகளுடன் 7 மீட்டர் உயரமுள்ள தீப ஸ்தம்பம் உள்ளது. இதன் வட்ட அடுக்குகளில் விளக்குகள் ஏற்றப்படும்.



இக்கோவிலில் மேல்சாந்தி, கீழ் சாந்தி, தந்திரி ஆகியோர் பூஜைகளுக்கான ஏற்பாடுகளைச் செய்பவர்களாக இருக்கின்றனர். இவர்களில் மேல்சாந்தி முதன்மை யானவர். இவரை தலைமைக் குருக்கள் என்பார்கள். முக்கியமான பூஜைகள், அலங்காரங்கள், அர்ச்சனை மற்றும் அபிஷேகங்கள் செய்பவர் இவர்தான். கீழ் சாந்தி என்பவர் உதவி அர்ச்சகர் ஆவார். விளக்கு ஏற்றுவது, புனித நீர் எடுத்துத் தருவது, மலர் மாலைகளை கொண்டு வருவது, நைவேத்தியங்கள் தயாரிப்பது இவரது பணியாகும். தந்திரி என்பவர் வேதமந்திரங்கள் கற்றவர். பூஜைகளை தந்திர முறையில் செய்வதால் இவர் தந்திரி என்று அழைக்கப்படுகிறார்.

**மனம் உருகி வணங்கினாலே போதும் :**

மேப்பத்தூர் நாராயண பட்டத்திரி என்பவர் கடுமையான வாதநோயால் அவதிப்பட்டார். அவரின் நோயை குருவாயூரப்பன் குணப்படுத்தினார். இதையடுத்து அவர் குருவாயூரப்பனைப் பற்றி 1036 பாடல்களைக் கொண்ட **ஸ்ரீநாராயணீயம்** என்னும் நூலை இயற்றினார். இது கிருஷ்ணரின் லீலைகளை எடுத்துரைக்கும் நூலாகும். இதன் ஒவ்வொரு பாடலையும் எழுதி முடித்தவுடன் பட்டத்திரி, “இப்படி லீலை செய்தாயா? என்று குருவாயூரப்பனை கேட்பாராம்.

அதற்கு குருவாயூரப்பன், தலையசைத்து, சம்மதம் தெரிவிப்பாராம். நாராயண பட்டத்திரி ஸ்ரீநாராயணீயம் எழுதிய இடம் ஆலயத்திற்குள் உள்ள நமஸ்கார மண்டபம் ஆகும். புனிதமாகக் கருதப்படும் அந்த இடத்தில் எவரும் அமருவதில்லை.

ஒருமுறை நாராயண பட்டத்திரி குருவாயூரப்பனிடம், “நீ விரும்பும் நைவேத்தியம் எது?” என்று கேட்டார். அதற்கு குருவாயூரப்பன், “நெய் பாயாசம்” என்று பதிலளித்தார். உடனே பட்டத்திரி ஒருவேளை நெய் பாயாசம் செய்ய எனக்கு வசதி இல்லை என்றால் நான் என்ன செய்வது? என்றார். “அவலும் வெல்லமும் போதும்” என்றார் குருவாயூரப்பன். அவலும் வெல்லமும் நைவேத்தியம் செய்து வைக்க எனக்கு வசதி இல்லையென்றால் என்ன செய்வது? என்று தன்னுடைய கேள்விகளைத் தொடர்ந்தார் பட்டத்திரி. அதற்கு “வெண்ணெய், வாழைப்பழம், பால், தயிர்” இவற்றில் ஏதாவது ஒன்றை வைத்து வழிபடு என்றார் கிருஷ்ணர். இப்போதும் பட்டத்திரி விடவில்லை. “மன்னிக்க வேண்டும் இறைவா! இப்போது நீ சொன்ன நான்கையும் கூட வைத்து வழிபட என்னிடம் வசதி இல்லை என்றால் என்ன செய்ய” என்றார். ”ஒன்றும் கவலை வேண்டாம். துளசி இலையும், தண்ணீரும் என்னை திருப்திப்படுத்தும்” என்று பதிலளித்தார் கிருஷ்ணர். ”அதையும் என்னால் செய்ய முடியாவிட்டால் என்ன செய்வது?” என்று கேட்டார் பத்திரி. இப்போது குருவாயூரப்பன், ”எனக்கு நைவேத்தியம் செய்விக்க ஒன்றும் இல்லையே என்று வருத்தப்பட்டு கவலையுடன் நீ அழுவாய் அல்லவா அப்போது உன் கண்களில் இருந்து வழியும் இரண்டு சொட்டு கண்ணீர் எனக்குப் போதும். வேறு ஒன்றும் வேண்டாம்” என்றாராம்.

ஆம். பரந்தாமரை வழிபட நைவேத்தியம் எதுவும் பெரிதாகத் தேவையில்லை. அவனை உணர்ந்து மனமுருகி பிரார்த்தனை செய்தாலே போதுமானது.

**A. கண்ணகி, சிறுகுடி**

உ

## குரு துதி

நன்னெறி பூண்டிருடையார் – குடியில்
நானிலம் போற்றும் குருவே
ஆசையைத் துறந்து (கோவண) ஆண்டியாய் வாழ்ந்து
அரும்பசி தீர்க்க – அன்னதானம் தந்து
மலைக் கேணியில் தன் குருவின் அருகில்
துயிலும் வள்ளலே! ஸ்ரீலஸ்ரீ குழந்தை சாமியே
போற்றி!! போற்றி!!

## ஸ்ரீலஸ்ரீ குழந்தை சாமிகளின் வரலாறு

கொல்லான் புலாலை மறுத்தானை கைகூப்பி
எல்லா உயிரும் தொழும் – குறள்.

அருவியூர் வடக்குவளவு நகரத்தார் என்றாலே சிவகோத்திரத்தில் சைவத்தைக் கடைப்பிடிக்கும் சமூகம். இந்த சமூக அமைப்பில், நமது நகரத்தார்களுக்கு எவ்வளவு பெருமை. இந்த சமூகத்தில் பிறந்து, துறவரம் பூண்டு சித்தராக வாழ்ந்த மகான் ஸ்ரீலஸ்ரீ குழந்தை சாமியின் வரலாறு அறிவோம்.

ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒரு தலையாய்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு – குறள்

மதுரை மாவட்டத்தில் குறிஞ்சி நிலத்தின் தீவு போல அமைந்துள்ள கிராமம் சொக்கம்பட்டி. நமது நகரத்தார்களில் கல்வாச நாட்டு சுந்தர பாண்டியபுரத்து நன்னெறி பூண்டிலூருடையார் குடிப்பட்டத்தில் பிறந்தவர் ஸ்ரீ குழந்தைசாமி.

கல்வாச நாட்டு சுந்தர பாண்டியபுரத்து நன்னெறி பூண்டி குடிப்பட்ட பங்காளிகள் கடந்த 100 ஆண்டுகளுக்கும் மேலாக ஐயாவின் குலதெய்வங்கள் ஆண்டி தெய்வம், கருப்பு தெய்வம், பொன்னழகி அம்மன் (பிள்ளை மங்களம்) இவர்களை வழிபாடு செய்து வந்துள்ளனர். சொக்கம்பட்டி கோவில் வீட்டில் மகா சிவராத்திரி படையல் மற்றும் ஆடி பூஜை கூட்டுப் பிரார்த்தனை

செய்து, ஊர் மக்களுக்கும் அன்னதானம் வழங்கி, குல தெய்வ வழிபாட்டை சிறப்பித்து வருகின்றனர்.அந்தக் குடிப்பட்டத்தில் தான் 18ம் நூற்றாண்டின் இறுதி கட்டத்தில் குழந்தைசாமி பிறந்தார். பெற்றோர்களால் பேணி வளர்க்கப்பட்ட குழந்தை திண்ணைப் பள்ளியில் கல்வியும் பயின்று வளர்ந்தார். அவருக்கு 15 வயதாகும் சமயம், ஒரு சித்தர் அந்த கிராமத்திற்கு வந்திருந்தார். உள்ளத்தில் பிறவியின் உண்மைப் பொருளைத் தேடும் ஆவலில் இருந்த குழந்தைசாமி அந்த சித்தருடனேயே வீட்டை விட்டு வெளியேறினார்.

சித்தர் ஸ்ரீ காமாட்சி மௌனகுரு அவர்களும், குழந்தைசாமியுடன் அவர் வாழ்ந்த திண்டுக்கல்லை அடுத்துள்ள மலைக்கேணி சென்றடைந்தனர். அந்த மலையிலேயே சுவாமிகள் தங்கியிருந்த குகையிலேயே தங்கி குருவுக்கு சிஷ்யனாக அந்த சித்தருக்கு பணிவிடை செய்து கொண்டு அங்கேயே இருந்து விட்டார். சுவாமி மௌனகுரு காமாட்சி அவர்களின் விருப்பம் அறிந்து மலையிலேயே ஒரு மடம் ஒன்றை நிறுவினார். மடத்தின் நிர்வாகத்திற்காக சொத்துக்கள் சேர்த்து வருமானத்திற்கு வழி செய்து, மடத்திற்கு வரும் பக்தர்கள், சாதுக்கள் யாராக இருந்தாலும் தங்க இடமும், அவர்களுக்கு உணவும் வழங்கப்பட்டன. இந்த மலைக்கேணி மடம் உருவானதில் ஸ்ரீ குழந்தைசாமி அவர்களின் பங்கு மிக முக்கியமானது.

ஸ்ரீ காமாட்சி மௌனகுரு சுவாமிகளுடனே வாழ்ந்த குழந்தைசாமி அவர்கள் கோவணம் மட்டுமே அணிந்திருப்பதும், தனக்கு வேண்டிய உணவை திருவோட்டில் வாங்கி சாப்பிடுவதுமாக, ஒரு தவ வாழக்கையை வாழ்ந்து வந்தார்கள். வாழ்விலும், சாவிலும் என்றும் என்னுடனே தான் குழந்தைசாமி இருப்பார் என்பது மௌனகுரு காமாட்சி சுவாமிகளின் விருப்பமாக இருந்துள்ளது.

குழந்தைசாமி ஐயா அவர்கள் தன்னை நாடிவரும் பக்தர்களின் ஜாதகத்தைக் கணித்து அவர்களது வாழ்வின் நிகழ்வுகளை தீர்க்கதரிசனமாக கூறி வந்துள்ளார்கள். அவரது கணிப்பு 100 சதவீதம் சரியாக இருந்துள்ளது. யாரிடமும்

கற்றுக் கொள்ளாமலேயே ஜாதகம் பார்க்கும் கலை, ஐயா அவர்களுக்கு கை வந்தது. அன்னாரின் ஆன்மீக தொண்டிற்கு கிடைத்த பரிசு.

மௌனகுரு காமாட்சி சுவாமிகள் ஜீவசமாதி அடைந்ததும், அவர்கள் பெயரிலேயே (ஸ்ரீலஸ்ரீ குழந்தைசாமி அவர்கள்) ஆலயம் அமைத்தார்கள். சித்தர்களின் அன்பையும் விருப்பத்தையும், அறிந்த சாதுக்கள் குழந்தைசாமியின் மறைவுக்குப் பின் அவரது பூத உடல் மௌனகுரு சுவாமிகளின் ஆலயம் அருகிலேயே அடக்கம் செய்யப்பட்டது. அந்த மேடையில் நீங்கள் இங்கே காணும் சிவலிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. இந்த சிவாலயத்தில் நடைபெறும் மகா சிவராத்திரி விழாவும், பௌர்ணமி பூஜையும், குரு பூஜையும் மிகவும் சீரும் சிறப்புமாக நடைபெற்று வருகிறது.

குழந்தைசாமி அவர்கள் 1970 ஆம் அண்டு ஆவணி மாதம் புனர்பூசம் நட்சத்தித்தில் பிறவியைத் துறந்து இறைவனடி சேர்ந்தார்கள். குழந்தை சாமி அவர்கள் எழுதி வைத்துள்ள உயிலின்படி மடத்தின் சொத்துக்கள் பாதுகாக்கப்பட்டு வருகிறது. மடத்தின் அறப்பணியிலும், அன்னதானமும் 1914 இல் ஆரம்பித்தது; மடத்தில் இன்றும் தொடர்ந்து நடைபெறுகிறது.

மலைக்கேணி முருகன் கோயில் நிர்வாகத்தை தமிழக அரசின் அறநிலையத்துறை எடுத்துள்ளது. ஆனால் மடத்தின் நிர்வாகம் அறநிலையத்துறைக்கு மறுக்கப்பட்டு ஸ்ரீலஸ்ரீ குழந்தைசாமியின் உயிலின்படி அரசுக்கு உரிமை இல்லை என்று வழக்கு தொடரப்பட்டு நீதிமன்றத்தில் வழக்கு நடந்து வருகிறது.

எத்தனையோ நிலக்கிழார்கள், எத்தனையோ தொழில் மேதைகள், ஏழை மாணவர்களுக்கு கல்விக்கு உதவும் வகையில் எத்தனையோ, கல்விக் காவலர்கள் நமது நகரத்தாரில் உள்ளனர் என்பது நாம் அறிவோம். ஆனால் நமது பிறப்பின் ரகசியம் உணர்ந்து பரமாத்மாவான ஆண்டவன் திருவருளைப் பெற்று, தவ வாழ்க்கை வாழ்ந்து, நாடி வந்தோர் நலம் காத்த பெருமான் ஸ்ரீலஸ்ரீ குழந்தை சாமி அவர்கள்.

ஸ்ரீலஸ்ரீ குழந்தை சாமியின் தொண்டினைப் போற்றி அன்னாரது அருள் வேண்டி வணங்குவோம். கல்வாச நாட்டு சுந்தர பாண்டியபுரத்து நன்னெறி பூண்டிலுருடையார் குடிப்பட்ட பங்காளிகளாகிய நாங்கள் எங்கள் ஐயா வின் தவ வாழ்வைப் போற்றுகின்றோம். நமது நகரத்தார் எல்லோரும் ஐயாவின் தவ வாழ்வைப் போற்றி பெறுமை கொள்வோம்.

ஸ்ரீலஸ்ரீ குழந்தை சாமியின் இந்த வரலாற்றுண்மையை எழுதத் தூண்டிய ஐயாவின் அருளையும், புகைப்படங்கள் கொடுத்துதவிய மலைக்கேணி பிச்சை சுவாமிகளின் அன்பையும், அருளையும் ஸ்ரீலஸ்ரீ குழந்தை சாமியின் கொள்ளுப் பேரனான T. நடராஜன் செட்டியார் மகன் T.N. சுரேஷ்ராம் ஆகிய நான் பெரும்பாக்கியமாகக் கருதி எனக்குத் தெரிந்த தகவல்களைத் தொகுத்துள்ளேன்.

குறிப்பு : இது தவிர மேலும் தகவலோ, அரிய புகைப்படங்களோ இருந்தால் கொடுத்து உதவுமாறு கேட்டுக் கொள்கிறேன். **-T.N. சுரேஷ்ராம் – மீனாட்சி, குன்றத்தூர், சென்னை–89.**

## அறுபதாம் ஆண்டு நிறைவு மணி விழா

கமுகக்கூருடையார்

திரு **சுப. சக்திவேல் செட்டியார்** – திருமதி **ச. சித்ரா ஆச்சி,**

அன்னை மெடிக்கல்ஸ், பாப்பநாயக்கன்பாளையம்,

கோயம்புத்தூர் – 37.

இவர்களின் **சஷ்டியப்த பூர்த்தி சாந்தி திருமண விழா**

**பெரியோர்களின் நல்லாசியுடன்** 10.04.2024

புதன்கிழமை அன்று திருக்கடையூர்

அருள்மிகு ஸ்ரீ அபிராமி அம்பாள் சமேத

ஸ்ரீ அமிர்தகடேஸ்வரர் சன்னதியில் மிகச் சிறப்பாக

நடைபெற்றது.

**தகவல் : SP. சசிதரன் B.Sc., CS., வடவள்ளி, கோவை**



## முனைவர்
## திரு A.S. மயிலப்பா அவர்களின்
## மண் வளம் மற்றும் தாவர ஊட்டச்சத்து
## (Experimental Soil Fertility and Biology)
## என்கிற நூலின் மதிப்புரை

சிவகங்கை மாவட்டம் S. புதூர் ஒன்றிம் S. புதூர் கிராமத்தைச் சேர்ந்த திரு அண. சுப்பையா செட்டியார் – தெய்வத்திரு குஞ்சரம் ஆச்சி அவர்களின் மூத்த மகன் முனைவர் A.S. மயிலப்பா அவர்கள் தனது எண்ணிலடங்கா சாதனைகளின் தொடர்ச்சியாக மண் வளம் மற்றும் தாவர ஊட்டச்சத்து என்ற சிறந்த புத்தகத்தை உலகப் புகழ் பெற்ற அமெரிக்க பதிப்பக குழுவான CRC பிரஸ் மூலம் சமீபத்தில் வெளியிட்டுள்ளார். CRC பிரஸ் எல்எல்சி என்பது தொழில்நுட்ப புத்தகங்களை தயாரிப்பதில் நிபுணத்துவம் பெற்ற ஒரு அமெரிக்க பதிப்பக குழுவாகும்.

மண்வளம் மற்றும் தாவர ஊட்டச்சத்து என்ற இவரின் இந்த தனித்துவமான புத்தகம் விவசாய உற்பத்தியை அதிகரிக்கவும் மற்றும் காற்று மண் மற்றும் நீர் தரத்தை பாதுகாக்கவும், ஊட்டச்சத்துக்களின் திறமையான பயன்பாடு எந்த வகையில் உதவுகிறது என்பது போன்ற முக்கியமான பிரச்சினைகளை எடுத்துரைக்கிறது.

இவரின் இந்த படைப்பு உண்மையிலேயே அறிவியல் அறிவு மற்றும் மண் அறிவியலுக்கான அணுகுமுறைகள் மற்றும் மண் வளம் மற்றும் பயிர் ஊட்டச்சத்தின் பல்வேறு அம்சங்களைப் பற்றி விவாதிக்கும் ஒரு சுற்றுலாப் பயணம் ஆகும். மண், தாவரம் மற்றும் நீரில் உள்ள அத்தியாவசிய தாவர ஊட்டச்சத்துக்களைப் பற்றியும் அத்தியாவசிய தாவர ஊட்டச்சத்து குறைபாடு அறிகுறிகள் மற்றும் நிவர்த்தி செய்யும் முறைகள் உட்பட அனைத்து கருத்துக்களையும் பொதிந்த ஒரு சிறப்பான படைப்பாகும்.விவசாயம், தோட்டக்கலை மற்றும் இளங்கலை பட்டப்படிப்புகளுக்கான சமீபத்திய ஐந்தாவது டீன்ஸ் குழுவின்

பாடத்திட்டங்களைப் பின்பற்றியும், இன்றைய விவசாயக் கல்விமுறையின் தேவைகளைப் பூர்த்தி செய்யும் வகையிலும் நன்கு விளக்கப்பட்ட விரிவான அத்தியாயங்களில் மண் வளம் மற்றும் தாவர ஊட்டச்சத்தின் அனைத்து அம்சங்களையும் உள்ளடக்கிய மிகவும் எளிமையான மற்றும் தெளிவான முறையில் எழுதப்பட்ட இந்தப் புத்தகம் மிகவும் தனித்துவம் வாய்ந்ததாக கருதப்படுகிறது.




இந்தப் புத்தகத்தை வாங்க விரும்புபவர்கள் CRC பதிப்பக குழுவின் இணைய தளமான https://www.routledge.com/Experimental-Soil-Fertility-and-Biology/Mailappa/p/book/9781032553207 –இல் 10% தள்ளுபடியுடன் பெற முடியும் என்பது கூடுதல் சிறப்பம்சமாகும். இது தவிர இவரின் இந்த புத்தகம் உட்பட இதர புத்தகங்களையும் Amazon மூலமாகவும் ஆர்டர் செய்ய முடியும் என்பது குறிப்பிடத்தக்கது.

இவரின் படைப்புகள் மாணவர்கள், ஆசிரியர்கள், ஆராய்ச்சியாளர்கள், விஞ்ஞானிகள், கொள்கை வகுப்பாளர்கள் மற்றும் மண் அறிவியல், வேளாண்மை, பயிர் அறிவியல் சுற்றுச்சூழல் அறிவியல், மற்றும் விவசாயம் ஆகியவற்றில் ஆர்வமுள்ள மற்றவர்களுக்கும் சிறந்த வழிகாட்டியாக இருக்கும். இதிலும் மிக முக்கியமாக JRF, SRF, ARS, NET போன்ற பல்வேறு போட்டித் தேர்வுகள் மற்றும் பிற போட்டித் தேர்வுகளையும், நேர்காணல்களையும் எதிர்கொள்ளும் மாணவர்களுக்கு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

## List of Book Published

| Sl.No. | Name of publication | Authors | Year and Number of pages | Publisher | ISBN |
|---|---|---|---|---|---|
| 1. | Experimental Soil Fertility and Biology | **Dr.A.S.Mailappa** | 2024 242 | CRC Press, Taylor & Francis Group, Boca Raton, Florida, U.S.A | 9781032553207 |
| 2. | Scientific Beekeeping | Ajay Kumara, K.M., Dr.S.M.Hussain, **Dr.A.S.Mailappa** and Dr.B.N.Hazarika - | 2023 | Dean College of Horticulture and Forestry, Central Agricultural University, Pasighat – 791102, Arunachal Pradesh | 9788195172610 |
| 3. | Management of Problematic Soils And Water | **Dr.A.S.Mailappa** | 2023 301 | Brillion Publishing, New Delhi | 9788119238323 |
| 4. | Guidelines for Formation and Promotion of Farmers' Producer Organizations | Dr. L. Geetarani Devi, Dr.L.D.Hatai, **Dr.A.S.Mailappa** and Prof. B.N.Hazarika | 2022 104 | Dean College of Horticulture and Forestry, Central Agricultural University, Pasighat – 791102, Arunachal Pradesh | 978-81-951726-0-3 |
| 5. | Shifting values and new innovations in urban agriculture during the covid-19 crisis | Dr. Ch. Victoria Devi, **Dr. A.S. Mailappa**, Prof. B.N.Hazarika, Dr. P. Raja, Dr. N. Surmina Devi and Dr. Punabati Heisnam | 2021 137 | Dean College of Horticulture and Forestry, Central Agricultural University, Pasighat – 791102, Arunachal Pradesh | 978-81-947589-5-2 |
| 6. | Agri Start-Ups And Agribusiness : Innovation for Fostering The Future of Agriculture | **Dr.A.S.Mailappa** and B.N.Hazarika | 2021 205 | Brillion Publishing, New Delhi | 978-93-92725-00-5 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 7. | Soil Fertility and Plant Nutrition Manual | **Dr.A.S.Mailappa** | 2021 186 | Brillion Publishing, New Delhi | 978-93-90757-26-8 |
| 8. | Agri-Horti Entrepreneurship for Socio-Economic Development | Dr. Punabati Heisnam, Dr. Y. Disco Singh, Prof. B.N.Hazarika, **Dr. A.S. Mailappa** and M. Bishwapati Devi | 2021 124 | Dean College of Horticulture and Forestry, Central Agricultural University, Pasighat – 791102, Arunachal Pradesh | 978-81-947589-7-6 |
| 9. | Agripreneurship Development and Practices | Dr. Y. Disco Singh, Dr. Punabati Heisnam, Prof. B.N.Hazarika and **Dr. A.S. Mailappa** | 2021 105 | Dean College of Horticulture and Forestry, Central Agricultural University, Pasighat – 791102, Arunachal Pradesh | 978-81-947589-8-3 |
| 10. | Fish Rearing and Management | S.M.Hussain, B.N.Hazarika and **Dr.A.S.Mailappa** | 2021 112 | Dean College of Horticulture and Forestry, Central Agricultural University, Pasighat – 791102, Arunachal Pradesh | 978-81-947589-0-7 |
| 11. | A Practical Manual on Soil, Water and Plant Analysis | **Dr.A.S.Mailappa** | 2020 116 | Biotica, Tripura | 978-81-947739-0-0 |
| 12. | Roadmap for Marketing and Value Chain Development of Ginger in the State of Arunachal Pradesh | Dr. L. Geetarani Devi, **Dr.A.S.Mailappa** and Dr. B.N.Hazarika | 2020 52 | Dean College of Horticulture and Forestry, Central Agricultural University, Pasighat – 791102, Arunachal Pradesh | 978-81-947589-4-5 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 13. | Introductory Geology and Soil Science | **Dr.A.S.Mailappa** | 2020 188 | Brillion Publishing, New Delhi | 978-93-86658-16-6 |
| 14. | A Practical Manual on Geology and Soils | **Dr.A.S.Mailappa** | 2020 116 | New India Publishing Agency, New Delhi | 978-81-94766-83-4 |
| 15. | Analytical Techniques and Instrumental Methods in Soil and Plant Analysis | **Dr.A.S.Mailappa** | 2020 104 | Brillion Publishing, New Delhi | 978-93-89350-88-3 |
| 16. | Manual on Manures, Fertilizers and Agro-Chemicals | **Dr.A.S.Mailappa** | 2020 106 | Brillion Publishing, New Delhi | 978-93-89350-74-6 |
| 17. | Advances in Production Technology of Khasi Mandarin | Prof. B.N.Hazarika, Dr. L. Geetarani Devi, Dr. Y. Disco Singh, **Dr.A.S.Mailappa** and Dr. Punabati Heisnam | 2020 138 | Dean College of Horticulture and Forestry, Central Agricultural University, Pasighat – 791102, Arunachal Pradesh | 978-81-94758-92-1 |
| 18. | National Webinar on Resurgence of Agriculture and Allied Sector Industries in North Eastern Region of India in a Post Covid-19 Scenario | **Dr.A.S.Mailappa** and Dr. B.N.Hazarika | 2020 170 | Dean College of Horticulture and Forestry, Central Agricultural University, Pasighat – 791102, Arunachal Pradesh | 978-81-947589-1-4 |
| 19. | Diagnosis and management of disorders and systematic diseases in horticultural crops | Manivannan, S., **Mailappa, A.S.** and Hazarika, B.N. | 2012 52 | Dean College of Horticulture and Forestry, Central Agricultural University, Pasighat – 791102, Arunachal Pradesh | - |
| 20. | Dynamics of Potassium in Acid Soils of Karnataka | **Dr.A.S.Mailappa** and Dr.R.Ananthanarayana | 2000 72 | Self | - |



## சிவபாதம் சேர்ந்தோர்

பாதம்பர மன்னவர் சூழ்ந்து, பணிந்து போற்ற
ஏதம் பிணியா வகை, இவ்வுலகு ஆண்டு, தொண்டின்
பேதம் புரியா அருள் பேரரசு ஆளப் பெற்று,
நாதன் கழல் சேவடி நண்ணினார் அண்ணலாரே.



குளத்துப்பட்டி திரு முத்துச்சாமி செட்டியார் தந்தை திரு **பொன்னழகு செட்டியார்** 16.03.2024 அன்று இறைவனடி சேர்ந்தார்.



பொன்னமராவதி அலங்காரம் & கோ திரு AM. ராஜா, திரு AM. நடராஜன், அந்தமான், திரு AM. கண்ணன் ஆகியோரின் தகப்பனார் அம்மன்குறிச்சி **ALM. மாணிக்கம் செட்டியார்** (வயது 93) 27.03.2024 வியாழக்கிழமை அன்று இறைவனடி சேர்ந்தார்.

பொன்-புதுப்பட்டி (படமிஞ்சி) திருமதி S. ரோஜா ஆச்சி அவர்களின் கணவரும், S. பாலா, S. பாலாஜி ஆகியோரின் தகப்பனாருமான திரு **T. செந்தில்குமார்** (வயது 54) 28.02.2024 அன்று இறைவனடி சேர்ந்தார். அன்னாரின் கண்கள் தானமாக வழங்கப்பட்டன.

**தகவல் : திருமதி S. ரோஜா ஆச்சி, பொன்.புதுப்பட்டி**



சிறுகுடி செ.சி. தர்மலிங்கம் செட்டியார் மனைவியும், திரு த.த. கார்த்திகேயன் அவர்களின் தாயாருமான திருமதி **த. ஆனந்தவள்ளி ஆச்சி** 01.04.2024 திங்கட்கிழமை அன்று இறைவனடி சேர்ந்தார்.



அ. காளாப்பூரைச் சேர்ந்த திரு ஆ. செங்குட்டுவன் (Ex. துணைச் சேர்மன்) 04.04.2023 அன்று இறைவனடி சேர்ந்தார்.



பொன்னமராவதி அவந சங்கத்தின் ஆரம்பகால நிர்வாகியும் மூத்த உறுப்பினருமான திரு. மு. சொக்கலிங்கம் அய்யா அவர்கள் உடற்கல்வி ஆசிரியர் பணி ஓய்வு (வயது 90) 23.4.2024 அன்று மாலை 8.30 மணிக்கு இயற்கை எய்தினார் என்பதை ஆழ்ந்த வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

தங்களின் பாசமிக்க உறவுகளை இழந்து தவிக்கும் உற்றார் உறவினர்களுக்கு எங்களது ஆழ்ந்த இரங்கலை தெரிவித்துக் கொள்வதோடு அன்னாரின் ஆன்மா சாந்தி அடைய பிரார்த்திக்கிறோம். **– நிர்வாகிகள். அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம்.**

**Book Post - Printed Matter**

To

From

**அ.வ.ந. கல்வி வளர்ச்சிக் கழகம்**
3, முதல் குறுக்குத் தெரு,
அழகப்பா காம்ப்ளக்ஸ் பின்புறம்,
மெயின்ரோடு ரோடு, **பொன்னமராவதி,**
புதுக்கோட்டை மாவட்டம் - 622 407.